அந்தரங்கமானது



OLD

# இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## க.பொ.த (உயர் தர)ப் பரீட்சை - 2020

## 25 - இலங்கை வரலாறு

## பழைய பாடத்திட்டம்

## புள்ளியிடும் திட்டம்



இந்த விடைத்தாள் பரீட்சகர்களின் உபயோகத்துக்காகத் தயாரிக்கப்பட்டது. பிரதம பரீட்சகர்களின் கலந்துரையாடல் நடைபெறும் சந்தர்ப்பத்தில் பரிமாறிக்கொள்ளும் கருத்துக்களுக்கிணங்க, இதில் உள்ள சில விடயங்கள் மாறலாம்.

இறுதித் திருத்தங்கள் உள்ளடக்கப்படவுள்ளன

# க.பொ.த (உயர் தர)ப் பரீட்சை - 2020

## 25 - இலங்கை வரலாறு (பழைய பாடத்திட்டம்)

## புள்ளி வழங்கும் திட்டம்

- வினாப்பத்திரம் I - 01 x 40 = 40

- வினாப்பத்திரம் II

| | | |
|---|---|---|
| முதலாம் வினா கட்டயமானது | = | 18 |
| ஏனைய வினாக்கள் (3 × 6 ) | = | 42 |
| மொத்தப் புள்ளிகள் | = | 60 |

**இறுதிப்புள்ளி = 40 + 60 = 100**

## விடைத்தாள்களுக்குப் புள்ளியிடல் - பொது நுட்ப முறைகள்

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன்பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற குமிழ்முனை பேனாவை பயன்படுத்தவும்.
2. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும்போது **தெளிவான இலக்கத்தில்** எழுதவும்.
3. இலக்கங்களை எழுதும்போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, சிற்றொப்பத்தை இடவும்.
4. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியை பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் ☐ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) ....................................................................................
....................................................................................
.................................................................................... ✓




(ii) ....................................................................................
....................................................................................
.................................................................................... ✓




(iii) ....................................................................................
....................................................................................
.................................................................................... ✓




(03) (i) $\frac{4}{5}$ + (ii) $\frac{3}{5}$ + (iii) $\frac{3}{5}$ = $\boxed{\frac{10}{15}}$

**பல்தேர்வு விடைத்தாள் (துளைத்தாள்)**

1. க.பொ.த.(உ. தர) மற்றும் தகவல் தொழிநுட்பப் பரீட்சைக்கான துளைத்தாள் திணைக்களத்தால் வழங்கப்படும். சரியாக துளையிடபட்டு அத்தாட்சிப்படுத்திய துளைத்தாள் தங்களுக்கு கிடைக்கப்பெறும். அத்தாட்சிப்படுத்திய துளைத்தாளைப் பயன்படுத்துவது பரீட்சகரின் கடமையாகும்.
2. அதன் பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்துவிட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.
3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை ✓ அடையாளத்தாலும் பிழையான விடையை O அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வவ் தெரிவுகளின் இறுதி நிரையின் கீழ் அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கட்டத்தில் எழுதவும்.

## கட்டமைப்பு கட்டுரை விடைத்தாள்கள்

1. பரீட்சார்த்திகளால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும். பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிடவும். புள்ளி வழங்கக்கூடிய இடங்களில் ✓ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.
2. புள்ளிகளை ஓவலண்ட் கடதாசியின் இடது பக்கத்தில் குறிக்கவும்.
3. சகல வினாக்களுக்கும் கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் முன் பக்கத்திலுள்ள பொருத்தமான பெட்டியினுள் வினா இலக்கத்திற்கு நேராக 2 இலக்கங்களில் பதியவும். வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்கள் தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா வினாக்களினதும் புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் மேலதிகமாக எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான புள்ளிகளை வெட்டி விடவும்.
4. மொத்த புள்ளிகளை கவனமாக கூட்டி முன் பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். விடைத்தாளில் வழங்கப்பட்டுள்ள விடைகளுக்கான புள்ளியை மீண்டும் பரிசீலித்த பின் முன்னால் பதியவும். ஒவ்வொரு வினாக்களுக்கும் வழங்கப்படும் புள்ளிகளை உரிய விதத்தில் எழுதுவும்.

## புள்ளிப்பட்டியல் தயாரித்தல்

இம்முறை சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்படமாட்டாது. இது தவிர ஒவ்வொரு வினாப் பத்திரத்துக்குமான இறுதிப்புள்ளி தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதியப்பட வேண்டும். பத்திரம் I ற்கான பல்தேர்வு வினாப்பத்திரம் மட்டும் இருப்பின் புள்ளிகள் இலக்கத்திலும் எழுத்திலும் பதியப்பட வேண்டும். 51 சித்திரப் பாடத்திற்குரிய I, II, மற்றும் III ஆம் வினாப்பத்திரங்களுக்குரிய புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதிந்து எழுத்திலும் எழுதுதல் வேண்டும்.

o o o

පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

ඉතිහාසය I (I කොටස)
வரலாறு I (பகுதி I)
History I (Part I)

25 T I

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

இலங்கை வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி. 1978 வரை

சுட்டெண் : ................................

**அறிவுறுத்தல்கள் :**

* இப்பகுதி **40** வினாக்களைக் கொண்டுள்ளது. எல்லா வினாக்களுக்கும் **இவ்வினாத்தாளிலேயே** விடை எழுதுக.
* ஒவ்வொரு வினாவுக்கும் தரப்பட்டுள்ள **ஐந்து** தெரிவுகளில் **ஒன்று** மட்டுமே சரியானது. அச்சரியான விடையைத் தெரிவுசெய்து தரப்பட்டுள்ள **அறிவுறுத்தல்களுக்கேற்ப** உமது விடையைக் குறித்துக் காட்டுக.
* பகுதி **I** இற்கு **40** புள்ளிகள் வழங்கப்படும்.
* இரண்டு பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலங்களாகும்.** விடைகளை எழுதி முடித்த பின்னர், பகுதி **I** இற்கான விடைத்தாள்களை பகுதி **II** இற்கான விடைத்தாள்களுடன் **இணைத்துக் கையளிக்குக.**

## பகுதி I

● **1** தொடக்கம் **5** வரையான வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோ ஒரு காரணத்தினால் ஏனையவற்றுடன் பொருந்தாது. பொருந்தாத அப்பெயரை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**1.** (1) போதிவம்சம் (2) தலதாவம்சம் (3) தீபவம்சம்
(4) தூபவம்சம் (5) தாதுவம்சம் (...3...)

**2.** (1) கொற தொட்ட (2) கோகண்ண (3) மகாதித்த
(4) ஊராத்தோட்டை (5) ஜம்புகோளப்பட்டினம் (...1...)

**3.** (1) மெகஸ்தீனிஸ் (2) செங்கோ (3) கொஸ்மஸ்
(4) பிளினி (5) ஒனேசிகிறிடஸ் (...2...)

**4.** (1) ஹட்டதாகே (2) ரங்கிரி தம்புள்ள (3) ரன்கொத் விகாரை
(4) தீகவாபி (5) நிஸ்ஸங்கலதா மண்டபம் (...4...)

**5.** (1) விஜயபா பிரிவேன (2) பத்மாவதி பிரிவேன (3) மயூரபாத பிரிவேன
(4) ஆலாஹான பிரிவேன (5) சுனேத்ராதேவி பிரிவேன (...4...)

● **6** தொடக்கம் **10** வரையான வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிச் சொற்கள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ளவை ஒன்றுடன் ஒன்று பொருந்தவில்லை. பொருந்தாத அச்சோடியை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**6.** (1) ஹோரபிடிகம கல்வெட்டு - வர்த்தக நகரின் நிர்வாகம் பற்றியதாகும்
(2) வேளைக்காரக் கல்வெட்டு - புனித தந்ததாதுவின் பாதுகாப்புடன் தொடர்புடையது
(3) அம்பகமுவ கல்வெட்டு - நீதித்துறை நிர்வாகம் பற்றியதாகும்
(4) தேவனகல கல்வெட்டு - காணித்தானம் பற்றியதாகும்
(5) தோணிகல கல்வெட்டு - தானியங்களை வைப்புச் செய்தலுடன் தொடர்புடையது (...3...)

7. (1) விஜயன் - தம்பபன்னி
(2) பண்டுவாஸதேவ - கல்யாணி
(3) பத்தகச்சான - கோகண்ண
(4) பிக்குணி சங்கமித்தை - ஜம்புகோளப் பட்டினம்
(5) ஹேமமாலாவும் தந்தவும் - லங்கா பட்டினம் (..2..)

8. (1) பூஜாவலிய - தந்த தாதுவின் வழிபாட்டுக் கிரியைகள் பற்றிய நூல்
(2) சமந்த பாஸாதிக - வினய பிடகத்துக்கு எழுதப்பட்ட விளக்கவுரை
(3) உத்தர விகாராத்த கதா - அபயகிரி விகாரை பிக்குகளால் எழுதப்பட்ட நூல்
(4) சத்தர்மரத்னாவலிய - தம்பதெனிய காலத்தில் எழுதப்பட்ட செய்யுள் நூல்
(5) யாழ்ப்பாண வைபவமாலை - யாழ்ப்பாணப் பிரதேச வரலாறு பற்றிய நூல் (..1..)

9. (1) வில்லியம் கிரகறி - தேசிய அருங்காட்சியகம் தாபித்தல்
(2) தோமஸ் மெயிற்லன்ட் - மேல் நீதிமன்றம் தாபித்தல்
(3) எட்வேர்ட் பாண்ஸ் - கன்னொறுவையில் கோப்பித் தோட்டம் ஆரம்பித்தல்
(4) றொறிங்ரன் - வீதி வரி விதித்தல்
(5) ஹெர்கியூலிஸ் றொபின்சன் - கம்சபா முறையை மீண்டும் தாபித்தல் (..2..)

10. (1) ஏ. ஈ. குணசிங்க - தொழிற்கட்சி
(2) என். எம். பெரேரா - லங்கா சமசமாஜக் கட்சி
(3) பொன்னம்பலம் அருணாசலம் - இலங்கை தேசிய சங்கம்
(4) ஜி. ஜி. பொன்னம்பலம் - அகில இலங்கை தமிழ் காங்கிரஸ்
(5) சிறிமாவோ பண்டாரநாயக - ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி (..5..)

● **11** தொடக்கம் **15** வரையிலுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் சில பெயர்கள் / கூற்றுகள் / திகதிகளின் தொகுதிகள் **X, Y** என்னும் நிரல்களில் தரப்பட்டுள்ளன. **Y** நிரலில் தரப்பட்டுள்ள பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் **X** நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோவொரு வகையில் தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடரொழுங்கில் தரப்படவில்லை. **Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுக்கேற்ப சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள ஐந்து சேர்மானங்களுள் ஒன்று சரியானதாகும். சரியான அச்சேர்மானத்தின் **இலக்கத்தைத் தெரிவுசெய்து** அடைப்புக்குறிக்குள் எழுதுக.

| | X | Y |
|---|---|---|
| 11. | (i) கோணா நதி | A மல்வத்து ஓயா |
| | (ii) கதம்ப நதி | B மகாவலிகங்கை |
| | (iii) ஜஜ்ஜர நதி | C கலா ஓயா |
| | (iv) கப்பகந்தர நதி | D மாணிக்க கங்கை |
| | (v) மகாவாலுக நதி | E தெதுறு ஓயா |

(1) AEDBC (2) BACED (3) CAEDB (4) DBCAE (5) EDBCA (..3..)

| | X | Y |
|---|---|---|
| 12. | (i) கோகில சந்தேசய | A அழகிய வண்ண முகவெட்டி |
| | (ii) குத்தில காவியம் | B இருகல்குலதிலக தேரர் |
| | (iii) சுபாஷித்த | C வத்தாவே தேரர் |
| | (iv) லோவட கங்கராவ | D கொட்டகமுவே ஸ்ரீராகுல தேரர் |
| | (v) சலலிஹினி சந்தேசய | E விதாகம மைத்திரிய தேரர் |

(1) AEDBC (2) BCAED (3) CAEDB (4) DEBCA (5) EDBCA (..2..)

| | X | Y |
|---|---|---|
| 13. | (i) முதலாம் பராக்கிரமபாகு மன்னன் | A கோட்டை |
| | (ii) இரண்டாம் பராக்கிரமபாகு மன்னன் | B கம்பளை |
| | (iii) நான்காம் பராக்கிரமபாகு மன்னன் | C குருணாகலை |
| | (iv) ஐந்தாம் பராக்கிரமபாகு மன்னன் | D தம்பதெனிய |
| | (v) ஆறாம் பராக்கிரமபாகு மன்னன் | E பொலன்னறுவை |

(1) ABECD (2) BCDAE (3) CABED (4) CDABE (5) EDCBA (..5..)

| | X | | Y |
|---|---|---|---|
| 14. (i) | சப்புமல் குமார | A | ஸ்ரீ விக்கிரம இராஜசிங்க மன்னன் |
| (ii) | டிகிரி பண்டார | B | இரண்டாம் இராஜசிங்க மன்னன் |
| (iii) | கோனப்பு பண்டார | C | ஆறாம் புவனேகபாகு மன்னன் |
| (iv) | மகா அஸ்தான | D | முதலாம் விமலதர்மசூரிய மன்னன் |
| (v) | கண்ணுசாமி | E | முதலாம் இராஜசிங்க மன்னன் |

(1) ABDCE (2) CADBE (3) CBADE (4) CEDBA (5) ECDBA

(...4...)

| | X | | Y |
|---|---|---|---|
| 15. (i) | கின்னர பத்த | A | யானைகள் பற்றிய அலுவல்கள் |
| (ii) | குருவே பத்த | B | போக்குவரத்து அலுவல்கள் |
| (iii) | மடிகே பத்த | C | கைவினைஞர் பற்றிய அலுவல்கள் |
| (iv) | படகல பத்த | D | நெசவு பற்றிய அலுவலகம் |
| (v) | கொட்டல் பத்த | E | மட்பாண்ட அலுவல்கள் |

(1) ABDCE (2) BCDAE (3) DABEC (4) DBACE (5) EABDC

(...3...)

- **16** தொடக்கம் **20** வரையுள்ள ஒவ்வொரு வினாவினதும் சரியான விடையைத் தெரிவு செய்து, அதன் இலக்கத்தை அடைப்புக்குறிக்குள் எழுதுக.

**16.** பின்வருவனவற்றுள் அனுராதபுரக் காலத்தில் இலங்கை மீது மேற்கொள்ளப்பட்ட தென்னிந்திய படையெடுப்புகளை சரியான ஒழுங்கு முறையில் உள்ளடக்கிய தெரிவு எது?

(1) எல்லாளன், சேனகுத்திக, சத்திராவிட, ஷட்திராவிட, முதலாம் இராஜராஜன்
(2) எல்லாளன், சத்திராவிட, சேன குத்திக, ஷட் திராவிட, முதலாம் இராஜராஜன்
(3) சேன குத்திக, ஷட் திராவிட, எல்லாளன், சத்திராவிட, முதலாம் இராஜராஜன்
(4) எல்லாளன், ஷட்திராவிட, சேன குத்திக, முதலாம் இராஜராஜன், சத்திராவிட
(5) சேன குத்திக, எல்லாளன், சத்திராவிட, ஷட் திராவிட, முதலாம் இராஜராஜன் (...5...)

**17.** பின்வருவனவற்றுள் இலங்கையின் தலைநகரங்கள் இடம் பெயர்ந்ததைச் சரியான ஒழுங்கு முறையில் உள்ளடக்கிய தெரிவு எது?

(1) பொலன்னறுவை, தம்பதெனிய, யாப்பகுவா, குருணாகல், கம்பளை
(2) பொலன்னறுவை, யாப்பகுவா, தம்பதெனிய, குருணாகல், கம்பளை
(3) யாப்பகுவா, பொலன்னறுவை, தம்பதெனிய, கம்பளை, குருநாகல்
(4) பொலன்னறுவை, தம்பதெனிய, குருணாகல், கம்பளை, யாப்பகுவா
(5) யாப்பகுவா, பொலன்னறுவை, குருணாகல், கம்பளை, தம்பதெனிய (...1...)

**18.** பின்வருவனவற்றுள் இலங்கையின் பிரித்தானிய ஆளுநர்களைச் சரியான ஒழுங்குமுறையில் உள்ளடக்கிய தெரிவு எது?

(1) எட்வேர்ட் பாண்ஸ், றொபேர்ட் பிறவுண்றிக், ரொறிங்ரன், வில்மற் ஹோட்டன், ஹென்றிவாட்
(2) றொபேட் பிறவுண்றிக், எட்வேர்ட் பாண்ஸ், வில்மற் ஹோட்டன், ரொறிங்ரன், ஹென்றிவாட்
(3) எட்வேட் பாண்ஸ், ஹென்றி வாட், றொபேர்ட் பிறவுண்றிக், வில்மற் ஹோட்டன், ரொறிங்ரன்
(4) ஹென்றி வாட், றொபேட் பிறவுண்றிக், எட்வேர்ட் பாண்ஸ், வில்மற் ஹோட்டன், ரொறிங்ரன்
(5) றொபேட் பிறவுண்றிக், வில்மற் ஹோட்டன், எட்வேர்ட் பாண்ஸ் ஹென்றி வாட், ரொறிங்ரன் (...2...)

**19.** பின்வருவனவற்றுள் இலங்கையின் பிரித்தானியர் ஆட்சிக் காலத்தில் நடைமுறைப்படுத்தப்பட்ட அரசியல் யாப்புச் சீர்திருத்தங்களை சரியான ஒழுங்கு முறையில் உள்ளடக்கிய தெரிவு எது?

(1) கோல்புறூக், மனிங், குறூ மக்கலம், சோல்பரி, டொனமூர்
(2) குறூ மக்கலம், கோல்புறூக், மனிங், சோல்பரி, டொனமூர்
(3) கோல்புறூக், டொனமூர், குறூ மக்கலம், மனிங், சோல்பரி
(4) கோல்புறூக், குறூ மக்கலம், மனிங், டொனமூர், சோல்பரி
(5) குறூ மக்கலம், கோல்புறூக், சோல்பரி, மனிங், டொனமூர்

(...4...)

**20.** பின்வருவனவற்றுள் சுதந்திரத்தின் பின்னர் இலங்கையின் பிரதம மந்திரிகளைச் சரியான ஒழுங்கு முறையில் உள்ளடக்கிய தெரிவு எது?

(1) டி.எஸ்.சேனநாயக, டட்லி சேனநாயக, எஸ்.டபிள்யு ஆர் டி பண்டாரநாயக, டபிள்யு தஹநாயக, ஜோன் கொத்தலாவல
(2) டட்லி சேனநாயக, டி.எஸ்.சேனநாயக, ஜோன் கொத்தலாவல, டபிள்யு தஹநாயக, எஸ்.டபிள்யு ஆர் டி பண்டாரநாயக
(3) டி.எஸ்.சேனநாயக, டட்லி சேனநாயக, ஜோன் கொத்தலாவல, டபிள்யு தஹநாயக, எஸ்.டபிள்யு ஆர் டி பண்டாரநாயக
(4). டி.எஸ்.சேனநாயக, ஜோன் கொத்தலாவல, டட்லி சேனநாயக, எஸ்.டபிள்யு ஆர் டி பண்டாரநாயக, டபிள்யு தஹநாயக
(5) டட்லி சேனநாயக, டி.எஸ்.சேனநாயக, டபிள்யு தஹநாயக, ஜோன் கொத்தலாவல, எஸ்.டபிள்யு ஆர் டி பண்டாரநாயக

(..3..)

- **21** தொடக்கம் **25** வரையான ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று **உரிய தலைப்பிற்குப் பொருந்தாதுள்ளது.** அதனைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை** அடைப்புக்குறிக்குள் எழுதுக.

**21. வட்டகாமினி அபயன் எதிர்நோக்கிய சவால்கள்**

(1) ஏழு தமிழர்கள் ஆக்கிரமிப்பு
(2) தீய பிராமணனின் கலகம்.
(3) வரட்சி பஞ்சம்.
(4) பாண்டியர் படையெடுப்பு.
(5) கபிசீசவின் மரணத்தின் பின்னர் படை வீரர்கள் வட்ட காமினி அபயவை கைவிட்டுச் செல்லுதல்.

(..4..)

**22. அனுராதபுர காலத்தில் அரச வருமானம்**

(1) நிலவரி அரசாங்கத்தின் முக்கிய வருமான மூலமாக இருந்தது.
(2) மஜிகபதி மீன்கள் மீதான வரியாகக் கருதப்பட்டது
(3) கொடவாய கல்வெட்டில் துறைமுகங்களில் சுங்கவரி விதிக்கப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.
(4) மன்னன் நிலத்தின் அதிபதியாகக் கருதப்பட்டதால் அவனால் நிலவரியை விதிக்கக் கூடியதாக இருந்தது.
(5) அனுராதபுர ஆட்சியாளர்களின் வருமானவழிகளில் ஒன்றாக மரண வரி இருந்தது.

(..5..)

**23. கம்பளை இராசதானிக்காலம்**

(1) மூன்றாம் விஜயபாகு கம்பளை இராசதானியின் முதலாவது மன்னன் ஆவான்.
(2) கம்பளை காலத்தில் நிஸ்ஸங்க அழகக்கோனார் கோட்டையின் பாதுகாப்பு அரணைக் கட்டினார்.
(3) சேனாலங்காதிகார கம்பளைக் காலத்தில் இருந்த பலம்மிக்க பிரபுத்துவ குடும்பமாகும்.
(4) திஸர சந்தேசய கம்பளைக் காலத்தில் எழுதப்பட்ட நூலாகும்.
(5) கடலாதெனிய விகாரை கம்பளைக் காலத்தில் கட்டப்பட்டது.

(..1..)

**24. பிரித்தானியர் ஆட்சிக்காலத்தில் பெருந்தோட்டப் பயிர்ச் செய்கை**

(1) கோல்புறூக் கமரூன் சீர்திருத்தம் பெருந் தோட்டப் பொருளாதாரத்துக்கு வழியமைத்தது.
(2) 1880 ஆம் ஆண்டு வரை கோப்பி முக்கிய வர்த்தகப் பயிராக விளங்கியது.
(3) இறப்பர் பயிர்ச்செய்கை பற்றிய முதலாவது பரீட்சார்த்த நடவடிக்கை ஹெனரத்கொடவில் இடம்பெற்றது.
(4) இறப்பர் பயிர்ச் செய்கை தோல்வியடைந்த பின்னர் சிங்கோனா பயிர்ச்செய்கை இந்நாட்டில் பிரபலமானது.
(5) பெருந்தோட்டப் பயிர்ச் செய்கைக்குத் தேவையான தொழிலாளர்கள் தென்னிந்தியாவிலிருந்து கொண்டு வரப்பட்டனர்.

(..4..)

**25. 1978 ஆம் அண்டு அரசியல் அமைப்பின் முக்கிய அம்சங்கள்**

(1) நிறைவேற்று அதிகார ஜனாதிபதி பதவி
(2) தேசிய அரசுப் பேரவை
(3) விகிதாசாரப் பிரதிநிதித்துவம்.
(4) மக்கள் கருத்துக் கணிப்பீடு.
(5) குற்றப் பிரேரணை

(..2..)

● **26** தொடக்கம் **30** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A)**, **(B)**, **(C)**, **(D)** என்னும் நான்கு தெரிவுகள் தரப்பட்டுள்ளன. இவற்றுள் **ஒன்று** அல்லது **பல** சரியான விடையாகும். சரியான விடை அல்லது விடைகளைத் தெரிவுசெய்து,

**(A)** யும் **(B)** யும் மாத்திரம் சரியாயின் .................................... **1** எனவும்
**(A)** யும் **(C)** யும் மாத்திரம் சரியாயின் .................................... **2** எனவும்
**(B)** யும் **(C)** யும் மாத்திரம் சரியாயின் .................................... **3** எனவும்
**(C)** யும் **(D)** யும் மாத்திரம் சரியாயின் .................................... **4** எனவும்
வேறு விடைகளின் எண்ணிக்கை அல்லது சேர்மானங்கள் சரியாயின் .......... **5** எனவும்

அடைப்புக்குறிக்குள் எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| **1** | **2** | **3** | **4** | **5** |
| **(A)** யும் **(B)** யும் மாத்திரம் சரி | **(A)** யும் **(C)** யும் மாத்திரம் சரி | **(B)** யும் **(C)** யும் மாத்திரம் சரி | **(C)** யும் **(D)** யும் மாத்திரம் சரி | **வேறு விடைகளின்** எண்ணிக்கை அல்லது சேர்மானங்கள் சரி |

**26.** உருகுணை இராச்சியம் தொடர்பான பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானது /சரியானவை?
(A) மகாநாமன் மாகமவிலிருந்து உருகுணைப் பிரதேசத்தை ஆட்சி செய்தான்.
(B) காஜரகாமத்தின் பத்து சகோதரர்களைத் தோற்கடித்த கோதாபய உருகுணை இராச்சியத்தை விரிவாக்கினான்.
(C) சேரு, சோம, லோண பிரதேசங்களை இணைத்துக் கொண்ட பின்னர் உருகுணை இராச்சியம் வீழ்ச்சியடையத் தொடங்கியது.
(D) துட்டகைமுனு மன்னனின் ஆட்சிக் காலத்தில் உருகுணை இராச்சியத்தின் நிர்வாக மையமாக கொத்மலை விளங்கியது.

(..1..)

**27.** யாழ்ப்பாண இராச்சியத்தின் வரலாறு பற்றிய பின்வரும் கூற்றுகளில் எது /எவை சரியானது /சரியானவை ?
(A) பட்டினப்பாலை எனும் நூலானது யாழ்ப்பாண இராச்சியத்தின் வரலாறைக் கற்பதற்கான முக்கிய மூலாதாரங்களில் ஒன்றாகும்.
(B) யாழ்ப்பாண இராச்சியத்தின் முதலாவது ஆட்சியாளன் பரராசசேகரன் ஆவான்.
(C) யாழ்ப்பாண இராச்சியத்தின் ஆட்சியாளர்களினால் சீதாவாக்கையிலுள்ள பரண்டி கோவில் கட்டப்பட்டது.
(D) இபன் பத்தூதாவின் அறிக்கைப்படி யாழ்ப்பாண இராச்சியத்தின் ஆட்சியாளன் இலங்கையின் சுல்தான் ஆவார்.

(..5..)

**28.** வெலிவிற்ற சரணங்கர தேரர் தொடர்பான பின்வரும் கூற்றுகளில் எது /எவை சரியானது /சரியானவை?
(A) தெகல் தொறு விகாரையில் உபசம்பதா பெற்றமை.
(B) சில்வத் சமாகம வினை தாபித்தல்.
(C) சீயம் உபசம்பதா வினைக் கொண்டு வர முன்னின்றமை.
(D) அஸ்கிரிய பீடத்தின் முதலாவது மகாநாயக்கராக நியமிக்கப்பட்டமை.

(..3..)

**29.** டொனமூர் அரசியல் அமைப்பு தொடர்பான பின்வரும் கூற்றுகளில் எது /எவை சரியானது /சரியானவை?
(A) அரச சபை தாபிக்கப்பட்டமை
(B) சர்வசன வாக்குரிமை வழங்கப்பட்டமை.
(C) பகிரங்க சேவை ஆணைக்குழு தாபிக்கப்பட்டமை.
(D) அமைச்சரவை முறை அறிமுகப்படுத்தப்பட்டமை.

(..5..)

**30.** 1915 அம் ஆண்டு சிங்கள முஸ்லிம் கலவரம் தொடர்பான பின்வரும் கூற்றுகளில் எது /எவை சரியானது /சரியானவை ?
(A) கம்பளை வல்லஹகொட தேவாலயத் திருவிழா ஊர்வலமே கலவரத்துக்கான முக்கிய காரணம் ஆகும்.
(B) இந்தக் கலவரத்தை கட்டுப்படுத்துவதற்கு ஊரடங்குச் சட்டம் அமுல்படுத்தப்பட்டது.
(C) அக்காலத்தில் றொபர்ட் சாமர்ஸ் பிரித்தானிய ஆளுநராக இருந்தார்.
(D) இக் கலவரத்தின் விளைவாக ஆயிரத்துக்கு மேற்பட்ட மக்கள் இறந்ததாக அறிவிக்கப்பட்டது.

(..2..)

- **31** தொடக்கம் **35** வரையிலான வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் சரியான விடையைத் தெரிவுசெய்து அதன் இலக்கத்தை அடைப்புக் குறியினுள் எழுதுக.

**31.** நிஸ்ஸங்க மல்ல மன்னன் ஆக்கிரமிப்பு செய்த தென் இந்திய பிரதேசம் எது?
(1) மதுராபுர (2) அதிவீரராம பட்டனம் (3) சோமேஸ்வரம்
(4) மகாபலிபுரம் (5) இராமேஸ்வரம் (...5...)

**32.** யாப்பகுவா இராச்சியத்தின் முதலாவது ஆட்சியாளன் யார்?
(1) இரண்டாம் பராக்கிரமபாகு (2) மூன்றாம் விஜயபாகு
(3) மூன்றாம் பராக்கிரமபாகு (4) முதலாம் புவனேகபாகு
(5) இரண்டாம் புவனேகபாகு (...4..)

**33.** கம்பளைக் காலத்தில் கட்டப்பட்ட லங்காதிலக விகாரையின் பிரதான கட்டிடக்கலை நிபுணர் யார்?
(1) கணேஸ்வராச்சாரியார் (2) ஸ்தபதிராயர்
(3) தேவரகம்பல சில்வத்தன (4) தேவேந்திரா மூலாசாரின்
(5) நிலகம பட்டபந்தா. (..2..)

**34.** வித்தியோதய பிரிவேனாவைத் தாபித்தவர் யார்?
(1) இரத்மலானை தம்மாலோக தேரர் (2) வலானே சித்தார்த்த தேரர்
(3) ஹிக்கடுவ சுமங்கல தேரர் (4) இரத்மலானை தர்மராம தேரர்
(5) வெலிவிற்ற சோரத தேரர் (..3..)

**35.** இலங்கைப் பல்கலைக் கழகத்தின் முதலாவது உபவேந்தர் யார்?
(1) ஐவர் ஜென்னிங்ஸ் (2) மார்க்கஸ் பெர்னாந்து (3) நிக்கலஸ் ஆட்டிகல
(4) ஜி.பி. மலலசேகர (5) ஈ.ஓ.ஈ பெரேரா (..1..)

- **36** தொடக்கம் **40** வரையிலுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் இரண்டு வகையான கூற்றுகள் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் தரப்பட்டுள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும். **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருத்தமானதைத் தெரிவு செய்து, அதன் இலக்கத்தை அடைப்புக்குறிக்குள் எழுதுக.

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **1** | சரியானது | பிழையானது |
| **2** | சரியானது | சரியானது |
| **3** | பிழையானது | பிழையானது |
| **4** | பிழையானது | சரியானது |
| **5** | சரியானது | சரியானதாக இருப்பதுடன் முதலாவது கூற்றை மேலும் விபரிக்கின்றது. |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|---|
| **36.** | மகாசேன மன்னனின் ஆட்சிக் காலத்திலேயே இலங்கையில் பௌத்த சங்கத்தினரிடையே பிளவு ஏற்பட்டது. | மகாசேன மன்னன் ஜேதவன விகாரையை குப்பிகல திஸ்ஸ தேரருக்கு தானமாக வழங்கினான். | (....3....) |
| **37.** | பராக்கிரமபாகு மன்னன் பௌத்த சங்கத்தினரை ஒன்றிணைத்தமை பற்றிய தகவல்களை கல்விகாரை கல்வெட்டு தெரிவிக்கின்றது | முதலாம் பராக்கிரமபாகு மன்னன் அதிக எண்ணிக்கையிலான கல்வெட்டுகளை அமைத்த ஆட்சியாளரெனக் கருதப்படுகின்றான். | (....1....) |
| **38.** | இலங்கைக்கு யேசு சபையினரை பிரித்தானியர் அறிமுகப்படுத்தினர். | ஒல்லாந்தர் இலங்கையின் கரையோரப் பிரதேசங்களில் கால்வாய் வழிப்பாதை முறையை அமைத்தனர். | (....4....) |
| **39.** | கோல்புறூக் கமரன் குழுவினர் இந்நாட்டின் கல்வி நடவடிக்கைகள் ஆங்கிலமொழி மூலம் இடம் பெற வேண்டுமென முன்மொழிந்தனர். | நிர்வாக நடவடிக்கைகளுக்குச் சுதேச மக்களைப் பயிற்றுவதற்கு ஆங்கில மொழிக் கல்வி ஊடகமாக இருக்க வேண்டுமென்பதே கோல்புறூக் ஆணைக்குழுவின் கருத்தாகும் | (....5....) |
| **40.** | ஐக்கிய நாடுகள் சபையின் உறுப்புரிமையை 1955 ஆம் ஆண்டில் இலங்கை பெற்றுக் கொண்டது. | எஸ். டபிள்யு ஆர்.டி பண்டாரநாயக்கா கொலை செய்யப்பட்ட பின்னர் வெற்றிடமான பிரதம மந்திரி பதவிக்கு சிறிமாவோ பண்டாரநாயக அம்மையார் நியமிக்கப்பட்டார். | (....1....) |

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2020

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்

විෂය අංකය பாட இலக்கம் **25** විෂයය பாடம் **இலங்கை வரலாறு**

## ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

### I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|
| 01. | 3 | 11. | 3 | 21. | 4 | 31. | 5 |
| 02. | 1 | 12. | 2 | 22. | 5 | 32. | 4 |
| 03. | 2 | 13. | 5 | 23. | 1 | 33. | 2 |
| 04. | 4 | 14. | 4 | 24. | 4 | 34. | 3 |
| 05. | 4 | 15. | 3 | 25. | 2 | 35. | 1 |
| 06. | 3 | 16. | 5 | 26. | 1 | 36. | 3 |
| 07. | 2 | 17. | 1 | 27. | 5 | 37. | 1 |
| 08. | 1 | 18. | 2 | 28. | 3 | 38. | 4 |
| 09. | 2 | 19. | 4 | 29. | 5 | 39. | 5 |
| 10. | 5 | 20. | 3 | 30. | 2 | 40. | 1 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு ලකුණු 01 බැගින්/ 01 புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 1 × 40 = 40

පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

ඉතිහාසය I (II කොටස)
வரலாறு I (பகுதி II)
History I (Part II)

25 T I

## இலங்கை வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி. 1978 வரை

**அறிவுறுத்தல்கள் :**

※ முதலாம் வினாவுக்கும் வேறு **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(**முதலாம்** வினாவுக்கு விடையளிப்பதற்கு **இலங்கையின் புறவுருவப்படம்** வழங்கப்பட்டுள்ளது.)

## பகுதி II

**1.** உமக்கு வழங்கப்பட்டுள்ள புறவுருவப்படத்தில் கீழே தரப்பட்டுள்ள **இடங்கள் எல்லாவற்றையும் குறித்துப் பெயரிட்டு,** அவற்றுள் எவையேனும் **இரண்டிற்குச்** சுருக்கமான வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.

(i) மாணிக்ககங்கை (ii) நாச்சதுவ வாவி (iii) பொலன்னறுவை
(iv) கம்பளை (v) தெவிநுவர (vi) நீர்கொழும்பு
(vii) கொட்டியாரம் (viii) சப்பரகமுவ மாகாணம்

(சரியாகக் குறித்துப் பெயரிடப்பட்ட ஒவ்வொன்றிற்கும் **01** புள்ளிவீதமும் சுருக்கமான வரலாற்றுக் குறிப்பு ஒவ்வொன்றுக்கும் **05** புள்ளி வீதமும் வழங்கப்படும்.)

**2.** 'மகாசேனன் ஆட்சிக் கால இறுதி வரையான இலங்கையின் வரலாற்றைக் கற்பதற்குப் பயன்படுத்தக்கூடிய முக்கிய மூலாதாரம் மகாவம்சம்' ஆகும்.

(i) மகாவம்சத்தை எழுதியவர் யார்? (01 புள்ளி)

(ii) மகாவம்சத்தை எழுதுவதற்கு அடிப்படையாக அமைந்த இரண்டு மூலாதாரங்களின் பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) தேவநம்பிய தீச மன்னனுக்கும் அசோகச் சக்கரவர்த்திக்கும் இடையிலான தொடர்புகளை மகாவம்சத்தில் குறிப்பிட்டவாறு சுருக்கமாகக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iv) மகாசேன மன்னனின் ஆட்சி இறுதி வரை இலங்கையின் வரலாற்றைக் கற்பதற்கு முக்கிய மூலாதாரமாக மகாவம்சம் கருதப்படக்கூடிய விதத்தினைப் பரிசீலிக்குக. (09 புள்ளிகள்)

**3.** இலங்கையில் அனுராதபுர, பொலன்னறுவைக் காலங்களில் நீர்ப்பாசன முறையின் படிமுறை வளர்ச்சி பற்றி பின்வரும் தலைப்புக்களில் விவரிக்குக.

(i) குளங்கள்
(ii) கால்வாய்கள்
(iii) நீர்ப்பாசனத் தொழில்நுட்பம்

(14 புள்ளிகள்)

**4.** முதலாம் பராக்கிரமபாகுவின் அரசியல் சாதனைகளைப் பின்வரும் தலைப்புகளின் கீழ் மதிப்பிடுக.

(i) இலங்கைத் தீவினை ஒன்றிணைத்தல் (08 புள்ளிகள்)

(ii) தென்னிந்திய ஆக்கிரமிப்பு (06 புள்ளிகள்)

**5.** ஆறாம் பராக்கிரமபாகுவின் ஆட்சிக்கால அரசியல், கலாசார முக்கியத்துவம் பற்றி விமர்சன ரீதியில் பரிசீலிக்குக. (14 புள்ளிகள்)

**6.** இலங்கையின் கரையோரப் பிரதேசங்களில் ஒல்லாந்தர் மேற்கொண்ட பொருளாதார கொள்கையினைப் பகுப்பாய்வு செய்க. (14 புள்ளிகள்)

**7.** "1818 பிரித்தானியருக்கு எதிரான சுதந்திரப் போராட்டம் இலங்கை வரலாற்றில் தீர்மானமிக்க சம்பவமாக விளங்குகின்றது."

(i) பிரித்தானிய எதிர்ப்புக் கிளர்ச்சி ஆரம்பமான பிரதேசத்தின் பெயர் யாது? (01 புள்ளி)

(ii) பிரித்தானிய எதிர்ப்புக் கலகத்தின் தலைவர்கள் **இருவரின்** பெயரினைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) பிரித்தானிய எதிர்ப்புப் போராட்டம் ஆரம்பமான விதத்தினை சுருக்கமாகத் தருக. (03 புள்ளிகள்)

(iv) 1818 இல் பிரித்தானிய எதிர்ப்புப் போராட்டத்தின் விளைவுகள் இலங்கை வரலாற்றில் தீர்மானமிக்க முக்கியமான கட்டத்தின் குறியீடாக அமைந்த முறையினைப் பரிசீலிக்குக.

(08 புள்ளிகள்)

**8.** 1972 ஆம் ஆண்டு அரசியல் அமைப்பின் முக்கிய அம்சங்களைப் பரிசீலிக்குக. (14 புள்ளிகள்)

**9.** பின்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டினது** வரலாற்று முக்கியத்துவம் பற்றிச் சிறுகுறிப்பு எழுதுக.

(i) இராசரட்டையில் சோழர்களின் ஆதிக்கம்.

(ii) இரண்டாம் பராக்கிரமபாகு மன்னன்.

(iii) கம்பளைக் காலத்தில் யாழ்ப்பாண இராச்சியத்தின் விரிவாக்கம்.

(iv) 19ஆம் நூற்றாண்டின் இறுதி அரைப் பகுதியில் ஏற்பட்ட பௌத்த மறுமலர்ச்சி.

(v) பொன்னம்பலம் இராமநாதன்.

(vi) 1956 பொதுத்தேர்தல்.

(ஒவ்வொன்றுக்கும் 07 புள்ளிகள்)

* * *

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
**Department of Examinations, Sri Lanka**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தரப்) பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

| | | |
|---|---|---|
| ඉතිහාසය I<br>வரலாறு I<br>History I | 25 | T |

ප්‍රශ්න අංකය / வினா இல. / Question No. } 1

විභාග අංකය / சுட்டெண் / Index No. } ................................



# இலங்கை வரலாறு

## ஆதி காலம் முதல் கி.பி.1978 வரை

**அறிவுறுத்தல்கள் :**

- முதலாம் வினாவுக்கும் வேறு ஏதாவது மூன்று வினாக்களுக்கும் விடை தருக.
  **(முதலாம் வினாவுக்கு விடையளிப்பதற்கு இலங்கையின் புறவுருவப்படம் வழங்கப்படும்)**

**01) உங்களுக்குத் தரப்பட்டுள்ள இலங்கை புறவுருவப் படத்தில் கீழ் குறிப்பிடப்படும் சகல இடங்களையும் குறித்துப் பெயரிட்டு எவையேனும் இரண்டிற்குச் சுருக்கமான வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.**

(i) மாணிக்ககங்கை
(ii) நாச்சடுவ வாவி
(iii) பொலன்னறுவை
(iv) கம்பளை
(v) தெவிநுவர
(vi) நீர்கொழும்பு
(vii) கொட்டியாரம்
(viii) சப்பரகமுவ மாகாணம்

( சரியாக குறித்து பெயரிட்ட ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளியாகும். சுருக்கமான வரலாற்றுக் குறிப்பு ஒவ்வொன்றுக்கும் 05 புள்ளிகளாகும்)

**02) "மகாசேனன் ஆட்சிக் கால இறுதி வரையான இலங்கையின் வரலாற்றைக் கற்பதற்குப் பயன்படுத்தக்கூடிய முக்கிய மூலாதாரம் மகாவம்சம்" ஆகும்.**

(i) **மகாவம்சத்தை எழுதியவர் யார்?** **(01 புள்ளி)**

(ii) **மகாவம்சத்தை எழுதுவதற்கு அடிப்படையாக அமைந்த இரண்டு மூலாதாரங்களின் பெயர்களைக் குறிப்பிடுக.** **(02 புள்ளிகள்)**

(iii) **தேவநம்பிய தீச மன்னனுக்கும் அசோகச் சக்கரவர்த்திக்கும் இடையிலான தொடர்புகளை மகாவம்சத்தில் குறிப்பிட்டவாறு சுருக்கமாகக் குறிப்பிடுக.** **(02 புள்ளிகள்)**

(iv) **மகாசேன மன்னனின் ஆட்சி இறுதி வரை இலங்கையின் வரலாற்றைக் கற்பதற்கு முக்கிய மூலாதாரமாக மகாவம்சம் கருதப்படக்கூடிய விதத்தினைப் பரிசீலிக்குக.** **(09 புள்ளிகள்)**

(i) **மகாவம்சத்தை எழுதியவர் யார்?**

திக்சந்த செனவியா பிரிவென்னாவில் வாழ்ந்த மகாநாம தேரர்

**(01 புள்ளி)**

(ii) **மகாவம்சத்தை எழுதுவதற்கு அடிப்படையாக அமைந்த இரண்டு மூலாதாரங்களின் பெயர்களைக் குறிப்பிடுக.** **(02 புள்ளிகள்)**

- சீஹலட்டகதா, வினயட்டகதா, புக்கஞ்ஞுபொத்த தீபவம்சகதா சேதியவம்ச கதா, மகாபோதிவம்கதா, சஹஸ்ஸ அட்டகதா, சஹஸ்ஸ மகாசேதிய வம்ச கதாவ, சீமாகதா ஹெலடுவா, உத்தர விஹார அட்ட கதா

**(எவையேனும் இரண்டு)**

(iii) **தேவநம்பிய தீச மன்னனுக்கும் அசோகச் சக்கரவர்த்திக்கும் இடையிலான தொடர்புகளை மகாவம்சத்தில் குறிப்பிட்டவாறு சுருக்கமாகக் குறிப்பிடுக.**

- தேவ நம்பிய தீச மன்னனும் அசோக சக்கரவர்த்தியும் கண்காணாத நீண்டகால நண்பர்கள்
- முதலாவது முடிசூட்டுவிழா தினத்தில் இயற்கையாகப் பெறப்பட்டதாகக் கூறப்படும் முத்து, இரத்தினங்கள் முதலிய பெறுமதிமிக்க பொருட்களைப் பெறுமதிமிக்க பரிசாக அரிட்ட இளவரசன் தலைமையிலான குழுவிடம் அசோக சக்கரவர்த்திக்கு அனுப்புதல்.
- தேவநம்பிய தீச மன்னன் பௌத்த மதத்தைப் பின்பற்றியவேளை இரண்டாம் முடிசூட்டுவிழாவுக்குத் தேவையெனக் கருதி அசோக மன்னன் மகிந்த தேரர் தலைமையில் தூதுக் குழுவொன்றினை இந் நாட்டுக்கு அனுப்பியதுடன் அரச இலட்சினை உட்படப் பட்டாபிஷேகப் பொருட்களை முடிசூட்டலுக்குத் தேவையானவற்றை அனுப்புதல்.
( பட்டாபிஷேகப் பொருட்கள் : நெற்றிப் பட்டம், உடைவாள், ஆலவட்டம், மிதியடி, தலைப்பாகை, காதணிகள் தங்கச்சங்கிலி கெண்டி பத்து நானாவித பொருட்கள் பெறுமதிமிக்ககைதுவட்டி, அனோத்த குளம் மற்றும் கங்கை நதியின் நீர், பெறுமதி மிக்க மருத்துவப் பொருட்கள், அரசகுமாரி)
- இவர்கள் இருவரிடையே காணப்பட்ட நட்பினால் மௌரிய முடிசூட்டு விழா இந்நாட்டுக்கு அறிமுகப்படுத்தப்பட்டதுடன் தீசனுக்கு “தேவநம்பிய” என்ற பட்டமும் வழங்கப்பட்டது.
- இருவரிடமும் ஏற்பட்ட தொடர்பின் காரணமாக இந்நாட்டில் மௌரிய அரசாட்சி முறையின் செல்வாக்கும் உண்டானது. (சேனாதிபதி, புரோகிதர், தண்டநாயகன் பொருளாளர் ஆகிய பதவிகள்)
- வெள்ளரசு மரக் (ஸ்ரீமகாபோதி) கிளையுடன் அசோக மன்னனின் மகளான பிக்குனி சங்கமித்தை இந்நாட்டுக்கு வருதல்.
- இந் நாட்டுக்கு புத்தபெருமானின் தாது பெறப்படுதல்.

**(02 புள்ளிகள்)**

(iv) **மகாசேன மன்னனின் ஆட்சி இறுதி வரை இலங்கையின் வரலாற்றைக் கற்பதற்கு முக்கிய மூலாதாரமாக மகாவம்சம் கருதப்படக்கூடிய விதத்தினைப் பரிசீலிக்குக.**

- விஜயன் தொடங்கி மகாசேன மன்னன் வரையிலான இலங்கை வரலாற்றைக் கற்பதற்கு இருக்கின்ற மூலாதாரங்களில் மகாவம்சம் முக்கிய இடம் பெறுதல்.
- கி. மு. 6ஆம் நூற்றாண்டு தொடக்கம் மகாசேனனின் ஆட்சி இறுதிவரை தொடர்ச்சியான வரலாற்றைக் கட்டியெழுப்ப முடிகின்றமை.

- அரசியல், ஆட்சி என்பன பற்றிய தகவல்கள் அறிக்கையிடப்பட்டிருத்தல் - ( மன்னன், அரசவம்சம் அரசர்களின் ஒழுங்கு முறை உறவு தொடர்புகள், ஆட்சியாளர்களின் அதிகாரப் பரம்பல், சிற்றரசர்கள், பிரதேச ஆட்சியாளர்கள், அதிகாரிகள், தென்னிந்திய படையெடுப்புக்கள் ) இவற்றின் நம்பிக்கைத்தன்மை கல்வெட்டுக்கள் உட்பட தொல்பொருளியல் பொருட்கள் இந்திய மூலாதாரங்கள் வெளிநாட்டு ஆவணங்கள் அறிக்கைகள் மூலம் உறுதிப்படுத்தப்பட்டுள்ளன. (பிராமி எழுத்துக்கள், குசலாலனகந்த, போவத்தேகல, வெல்எல்லுகொட, கொட்டதாமுஹெல, வெஸ்ஸகிரிய, மஹரத்மல, திம்பிரிவாவ, கொரவக்கல, சிதுல்பவ்வ ஆகிய கல்வெட்டுக்கள், வல்லிபுரம் பொற்சாசனம்)

- விவசாயம், வர்த்தகம் நீர்பாசனம், நீர்பாசனத் தொழினுட்பம் கைத்தொழில் ஆகிய பொருளாதார நடவடிக்கைகள் பற்றிய தகவல்கள் அறிக்கையிடப்பட்டிருத்தல் (தோணிகல, நாகிரிகந்த கொடவாய, மீன்வில பாலுமிகிச்சாவ மஹப்புகொல்லாவ, அலியாகட, போவத்தேகல ஆகிய கல்வெட்டுக்கள், பெரிய புளியன் குளம் பர்வத நாணயங்கள் பல்வேறு சிதைவுகள் மூலம் இத் தகவல்கள் உறுதிப்படுத்தப்பட்டுள்ளன.

- சமூகம், சமயம், கலாசாரம், வரலாறு பற்றிய தகவல்கள் பல வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

- புத்தர் பெருமானின் இலங்கைப் பயணம், இலங்கையில் பௌத்த சமயம் தாபிக்கப்படுதல், பௌத்த சமயத்துக்கு அரச ஆதரவு கிட்டுதல், பிக்குமார் பிக்குணிமார் சாசனம் தொடர்பான தகவல்கள் , ஆராமைகள் காணிக்கையாக வழங்குதல், மகாவிகாரை அதற்கான கட்டிடங்கள் அமைத்தல், மகாபோதி நடப்படுதல், ரூவான வெலிசய கட்டடம் பற்றிய தகவல்கள் அபயகிரி விகாரை, ஜேதவன விகாரை உட்பட விகாரைகள் கட்டப்படுதல், ஆரியவம்ச சூத்திர ஓதுதல் போன்ற சமயம் சார்ந்த விழாக்கள், கல்வி, பஞ்சசீலத்தை அடிப்படையாகக் கொண்ட சமூகம் போன்ற பல்வேறு பிரிவுகள் பற்றிய தகவல்கள் குறிப்பிடப்படுதல்.

- மகிந்தலை, சீதுல்பவ்வ, தோணிகல, ரஜகல கல்வெட்டுக்கள் மூலம் நிருபிக்கப்பட்டுள்ளமை.

**(09 புள்ளிகள்)**

**03) இலங்கையில் அனுராதபுர, பொலன்னறுவைக் காலங்களில் நீர்ப்பாசன முறையின் படிமுறை வளர்ச்சி பற்றி பின்வரும் தலைப்புக்களில் விவரிக்குக.**

(i) **குளங்கள்**

(ii) **கால்வாய்கள்**

(iii) **நீர்பாசனத் தொழினுட்பம்**

**(14 புள்ளிகள்)**

(i) **குளங்கள்**

- குளங்கள் அமைப்பதில் முறையான வளர்ச்சி காணப்படல்
- கி. மு 4 ஆம் நூற்றாண்டில் பண்டுகாபய மன்னன் ஜயவாவி, அபயவாவி, காமினிவாவி ஆகிய மூன்று வாவிகளை அமைத்ததாக மகாவம்சம் குறிப்பிடுகிறது.
- கி. மு மூன்றாம் நூற்றாண்டில் தேவநம்பிய தீசமன்னன் திசாவாவி, நுவரவாவி அமைத்தல்.
- கி.பி 1 ஆம் நூற்றாண்டில் வசபமன்னன் பெருமளவிலான குளங்களை கட்ட ஆரம்பித்தமை. அதற்கேற்ப 11 குளங்களைக் கட்டினான். (மகாவிலச்சிய, மானன்கட்டிய, நொச்சிபொத்தான, கிரிவடுன்ன)
- கி. பி 3 ஆம் நூற்றாண்டில் மகாசேன மன்னன் 16 குளங்களைக் கட்டினான். ( இவற்றுள் மின்னேரி வாவி முக்கியத்துவம் வாய்ந்தது மன்னன் மின்னேரியாத் தெய்வம் எனக் கருதப்பட்டான். ஹுருளுவாவி, மஹகல்கடவல வாவி, மாகல்ல வாவி, விராளுகல்ல வாவி, கவுடுளு வாவி, கணதரா வாவி)
- 1 ஆம் உபதிஸ்ஸ மன்னன் சிறு அளவிலான 6 குளங்களைக் கட்டுவித்தான். தற்போது இவற்றை இனம் காணுவது சிரமம்.
- தாது சேன மன்னன் கலாவாவி உட்பட 18 குளங்களைக் கட்டுவித்தான். (மகாதத்த வாவி, பானன்காம குளம், மாஎலிய வாவி, யோத வாவி)
- கி. பி ஆறாம் நூற்றாண்டில் இரண்டாம் முகலன் 3 குளங்களைக் கட்டுவித்தான். (நாச்சடுவ பத்தமாஸ ாண வாவி பதவியா – தகவாவி கரிதர வாவி – இதுவரை இனம் காண முடியவில்லை)
- 1 ஆம் அக்போ இரண்டு குளங்களைக் கட்டுவித்தான். குருந்து வாவி (தண்ணி முறிப்புக் குளம்) மாமடுவ வாவி
- 2 ஆம் அக்போ கந்தளாய், கிரிததலை குளங்களைக் கட்டுவித்தான்.
- 8ஆம், 9ஆம், 10ஆம் நூற்றாண்டுகளில் பாரிய குளங்கள் கட்டப்பட்டதாகத் தெரியவில்லை. புனருத்தாரணம் செய்யப்பட்டன. (5 ஆம் அக்போ, 2 ஆம் உதய, 2ஆம் மகிந்த, 2ஆம் சேன)

- 1ஆம் விஜயபாகு ஊவா பிரதேசத்தில் புதுகுண வாவியை அமைப்பித்தான்.
- 1 ஆம் பரராக்கிரமபாகு கட்டிய குளங்களில் பராக்கிரம சமுத்திரம் மிக முக்கியமானதாகும். மகாவம்சத்தின்படி பிரதான குளங்கள் 163 உம் சிறிய குளங்கள் 2376 உம் கட்டுவித்தான்.
- தெதுறுஊயாவில் கொட்ட பத்த, சுகர நிஜ்கர தோராதக்திக என்ற 3 இடங்களில் கட்டப்பட்ட நீர்ப்பாசன முறை மிக முக்கியமானவையாகும்.
- அனுராதபுர, பொலன்னறுவைக் காலங்களில் வளவ கங்கை, கிரிந்தி ஓயா மாணிக்க கங்கை நதிகளை மூலமாகக் கொண்டு உருகுணையில் நீர்த்தேக்கங்கள் அமைக்கப்பட்டன.

(ii) **கால்வாய்கள்**

- கி. மு 1ஆம் நூற்றாண்டில் குட்டகண்ண திஸ்ஸ மன்னன் அமைப்பித்த வன்னக கால்வாய் (மின்வில கல்வெட்டு, மகாவம்சம்)
- வசபமன்னன் 12 காலவாய்களை அமைத்தான் எலஹர யோதஎல என்பன ( ஆலிசார கால்வாய்) முக்கியமானைவ. எலஹர அம்பன் கங்கைக்கு குறுக்கே கட்டப்பட்டு கால்வாயினுடாக 30 மைல் மேற்குத் திசையாக நீரைக் கொண்டு சென்றது.
- மகாசேன மன்னன் பப்பதந்த கால்வாய் அமைத்து மகாவலிநீர் கிழக்குப் பகுதிக்குக் கொண்டு செல்லப்பட்டது. அம்பன் கங்கைக்குக் குறுக்கே தலவத்து கால்வாய் அமைத்து அதன்மூலம் நீர் மின்னேரி கால்வாய்க்குக் கொண்டு செல்லப்பட்டது.
- தாதுசேன மன்னன் 54 மைல் நீளமான ஜயகங்கையை அமைத்தான். இது கலாவாவியிலிருந்து ஆரம்பித்து திசாவாவியில் முடிவடைந்தது.
- மல்வத்து ஓயாவின் நீர் 17 மைல் நீளமான கால்வாய் வழியாக மன்னார் மாவட்டத்தில் உள்ள யோதவாவிக்கு கொண்டு செல்லப்பட்டமை.
- மகாவலி கங்கையின் மணிமேகலாவில் இருந்து 17மைல் நீளமான மினிப்பே கால்வாய் 1 ஆம் அக்போ மன்னனால் கட்டப்பட்டது.
- களுகங்கையில் ஹத்தொட்ட அணைக்கட்டில் தொடங்கும் 28 மைல் நீளமான கால்வாய்.
- அம்பன் கங்கையில் அங்கமடில்ல எனுமிடத்திலிருந்து வரும் அங்கமிடில்ல கால்வாய் அல்லது ஆகாயகங்கை.
- 1ஆம் பராக்கிரமபாகு மன்னன் அணைக்கட்டுக்கள் 165 உம் கால்வாய்கள் 3910 உம் அமைத்தமையும் சிதைவடைந்த 1753 அணைக்கட்டுக்களை புனரமைப்புச் செய்வித்தமையும்.

(iii) **நீர்ப்பாசனத் தொழினுட்பம்**

- தொழினுட்பம் சிறு குளங்களை விட பரந்த குளங்களை கட்டுவித்தலிலேயே சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகக் காணப்படுகிறது.

- நிலத்தை அளத்தல், சமப்படுத்தல் புவியின் சாய்வு தொடர்பான உயர்ந்த பொறியியல் அறிவு காணப்பட்டது.

- இரு பக்கமும் அமைந்த மலைகளை ஆதாரமாகக் கொண்டு குளத்தின் அணைக்கட்டு அமைக்கப்பட்டது. எனினும் ஆகட்டிமுறுப்பு யோதவாவி என்பவற்றின் தொழினுட்பம் வேறுபட்டதாகும். யோதவாவியின் அணை மலைமுகடு இரண்டில் நீண்ட அணை இரண்டைக் கட்டியதனாலாகும். இந்த அணை வில் வடிவில் உள்ளது.

- குளங்களை அமைக்கும்போது விசேடமான தொழினுட்பப் பிரிவுகள் பலவற்றைக் காணக் கூடியதாயிருத்தல். குளத்தின் அணைக்கட்டு, கலிங்கற் தொட்டி, சுருங்கை, அலைதாங்கி

- குளங்களை ஒன்றோடொன்று இணைப்பதற்கு கட்டப்பட்ட சிக்கலான கால்வாய் தொகுதிகள் (எலஹர கால்வாயை மின்னேரியா குளம் வரை கொண்டு செல்ல நிலத்தோற்றத்தைக் பயன்படுத்திக் கொண்டமை) ஜயகங்கையின் முதல் 17 மைல் வரை ஒவ்வொரு மைல் தூரத்திற்கும் 6 அங்குலத்திற்கே நீர் கீழ்றங்கியது.

- ஜய கங்கை இந்நாட்டின் நீர்ப்பாசனத் தொழினுட்பத்துறையின் மேன்மையான நிருமாணிப்பு ஆகும். ஜயகங்கை இடத்துக்கு இடம் விரிந்து செல்லும் கிளைக் கால்வாய்கள் மூலம் சிறு கிராமக் குளங்களுக்கு நீர் வழங்கப்பட்டது.

- ஆறுகளுக்கு குறுக்கே அணைகட்டும் தொழினுட்பத்துக்கு சிறந்த உதாரணம் அங்கமடில்ல அணைக்கட்டு ( அம்பன் கங்கையின் குறுகலான இடத்தில் கற்பாறை மீது பெருமளவு கற்களைக் குவித்துக் கட்டப்பட்டுள்ளது.

- அக் காலத்தில் சூட்சுமமாக அளவிடும் உபகரணங்கள் பயன்படுத்தப்பட்டன ( புராதன மாதுறு ஓயாவின் சுருங்கை)

**(14 புள்ளிகள்)**

04) முதலாம் பராக்கிரமபாகுவின் அரசியல் சாதனைகளைப் பின்வரும் தலைப்புகளின் கீழ் மதிப்பிடுக.

(i) இலங்கைத் தீவினை ஒன்றிணைத்தல் (08 புள்ளிகள்)

(ii) தென்னிந்திய ஆக்கிரமிப்பு (06 புள்ளிகள்)

(i) இலங்கைத் தீவினை ஒன்றிணைத்தல்

- தக்கிண பிரதேசத்தின் ஆட்சியாளனாக நியமிக்கப்பட்டமை பண்டுவஸ்நுவர (பாராக்கிரமபுர) ஆட்சி மையமாகுதல்.
- நாட்டின் எல்லைகளில் பாதுகாப்பை ஏற்படுத்தல் பொருளாதார அபிவிருத்திக்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளுதல்.
- படைகளை ஒழுங்குபடுத்தியமை
- இராசரட்டையைக் கைப்பற்றுவதற்கு கஜபாகு மன்னனுடன் போரிட்டமை
- மகாகம தேசத்தைக் கைப்பற்றியமை
- பொலன்னறுவையைக் கைப்பற்றியமை
- கஜபாகுவுடன் ஒப்பந்தம் செய்ய முயன்றமை (சங்கமு விகாரை கல்வெட்டு)
- கஜபாகு இறந்ததின் பின்னர் ஒப்பந்தம் மீறப்பட்டதால் உருகுணையின் மானாபரணனுடன் போரிட்டமை
- மானாபரணன் உருகுணைக்குத் தப்பியோடியமையும் பராக்கிரமபாகு பொலன்னறுவைக்கு அரசனாகியமையும்
- கி. பி. 1153 இல் பராக்கிரமபாகு சிம்மாசனம் ஏறுதல்
- உருகுணையில் கலகம் ஏற்படுதலும் சுகலா அரசியைத் தோற்கடித்தமையும்
- தலதா தந்த தாதுவை கைப்பற்றியமை
- மையப்படுத்தப்பட்ட ஆட்சி ஒழுங்குமுறையை கட்டியெழுப்பியமை

(08 புள்ளிகள்)

(ii) **தென்னிந்திய ஆக்கிரமிப்பு**

- இந்தப் படையெடுப்புப் பற்றி மகாவம்சம், பல்லவராயன்பேட்டை, திருவாலங்காடு, ஆர்ப்பாக்கம் ஆகிய கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளன.

- பர்மா தேசத்தை (ராமக்ஜ தேசம்) ஆக்கிரமிப்புச் செய்தல் பர்மாவுடன் வர்த்தகம், சமயம்சார் தொடர்புகளைக் கொண்டிருத்தல்

- முதலாவது படையெடுப்பு பாண்டிய நாடுமீது மேற்கொள்ளப்பட்டது.

- தென்னிந்தியாவில் பாண்டிய அரசின் சிம்மாசனத்துக்காக குலசேகர பாண்டியனுக்கும் பராக்கிரம பாண்டியனுக்கும் இடையே போர் ஏற்பட்டமை. இப்போராட்டத்தில் பராக்கிரம பாண்டியன் பராக்கிரமபாகு மன்னனிடம் யுத்த உதவியைக் கோரியதுடன் குலசேகர சோழனின் உதவியையும் பெற்றுக் கொண்டமை.

- இலங்காபுர தளபதியின் கீழ் பாண்டியநாட்டுக்கு படைகளை அனுப்பத் திட்டமிட்டபோதும் அவர்கள் இலங்கையிலிருந்து புறப்படு முன்னரே சோழ மன்னனின் உதவியுடன் குலசேகரன் பராக்கிரம பாண்டியனைக் கொலை செய்து மதுராபுரியைக் கைப்பற்றினான்.

- எவ்வாறாயினும் இலங்கைத் தளபதி படையுடன் பாண்டியநாடு சென்று குலசேகர பாண்டியனுடன் பல போர்கள் புரிந்தான்.

- இலங்கைப் படைகள் தலடில்ல துறைமுகத்திலிருந்து இராமேஸ்வரத்தைக் கைப்பற்றும்வரை சிறுயுத்தங்கள் பல செய்ததுடன் இராமேஸ்வரத்திலிருந்து குந்துகாலயத்துக்கு சென்று அங்கு பராக்கிரமபுர என்ற பெயருடன் கோட்டை ஒன்றைக் கட்டி முகாம் அமைத்தான்.

- அங்கிருந்து இலங்கைப் படையினர் வேறு கிராமங்களையும் கைப்பற்றினர் (சுருக்கட்ட, கொளுவர, மருதூப சுற்றியுள்ள கிராமங்களைச் சூறையாடினர்

- வடலிப் போரின் பின்னர் இந்தப் படைகள் பராக்கிரமபுரவுக்கு பின்வாங்கியதுடன் குலசேகரன் படைகளுடன், பராக்கிரமபுரக் கோட்டையைத் தரையினாலும், கடலினாலும் தாக்குதல் நடத்தையமை.

- எனினும் குலசேகரனைத் தோற்கடித்து சிங்களப் படை குலசேகர மன்னனின் எருக்காவுர கோட்டைக்கு தீ மூட்டுதல். இலங்கைத் தளபதி அங்கும் கோட்டை ஒன்றைக் கட்டுதல்.

- பின்னர் அங்கிருந்து வடலிய ஸ்ரீ வலய உள்ளிட்ட நான்கு கோட்டைகளைக் கைப்பற்றியமை. பாண்டிய படைத்தளபதிகள் பலரைத் தோற்கடித்தமை. பாண்டிய படைத்தளபதிகள் பலரை சிங்கள படையுடன் சேர்த்துக் கொண்டமை. போரில் சிங்கள படையினர் கங்கை கொண்டானுக்குத் தொடர்ந்து சென்றமை முக்கிய நிகழ்வாகும்.

- சில நாள்களில் வாலக் கோட்டை நெட்டுறுவ ஆகியவற்றைக் கைப்பற்றுதல் நெட்டுருவில் இலங்கை தளபதி உபாயம் கையாண்டு தமிழ்தலைவர்களுக்கும் அதிகாரிகளுக்கும் வெகுமதி வழங்கி தங்கள் பக்கம் சேர்த்துக் கொண்டமை.

- பின்னர் சிங்களப் படை அணிவலக்கொட்டயில் முகாம் அமைத்து குலசேகரனைத் தோற்கடித்து மதுரா-புரியைக் கைப்பற்றியமை.

- பின்னர் இலங்கைத் தளபதி நெட்டுறுவ எனுமிடத்திலிருந்து போரை ஆரம்பித்தான். குலசேகர மன்னன் பானபத கோட்டையில் தங்கியிருந்தமை - சிங்களப் படையினர் போரிட்டு பானபத கோட்டை உள்ளிட்ட பல பிரதேசங்களையும் செம்பொன்மாறியையும் கைப்பற்றியமை.

- குலசேகர மன்னன் உதவிகள் பெற்று படைப்பலத்தை அதிகரித்தமை

- இரு தரப்பினருக்குமிடையிலான போரில் சிங்களப்படை வடக்கு வாயில் (கேச தாதுகித்தி, ஜகத் விஜய ஆகியோரின் வழிகாட்டல்) தெற்குவாயில் (லங்காபுரதேவ, லங்காகிரிசோர, கோகண்ட தண்டநாயக்க, கேசதாதுலோக வழிகாட்டல்) குலசேகரனைத் தோற்கடித்து பலத்த சேதங்களை ஏற்படுத்தி வெற்றி பெறுதல்.

- பின்னரும் இரு தரப்பினருக்கிடையில் கடும்போர் இராஜிநாபுரத்தில் நிகழ்ந்தமை. குலசேகர மன்னன் தங்கியிருந்த கோட்டை முற்றுகையிடப்பட்டு வெற்றி பெற்றமை. தண்டநாயக்க கோகண்ண, லங்காபுரதேவ கேசதாது ஆகியோர் கதவுகளை உடைத்து மதில்மீது பாய்ந்து கோட்டையை அழித்தமை.

- பின்னர் மதுராபுரி சென்று சிங்கள மன்னனின் ஆலோசனைப்படி வீரபண்டுவுக்கு முடிசூட்டியமை. எனினும் யுத்தம் முடிவடையாமை.

- குலசேகர மன்னன் பாண்டிய ஆட்சியாளர் படைகளைச் சேர்த்து போரிட்டமை. சிங்களப் படைகள் பலங்கோட்டை வரை சென்று குலசேகரனைத் தோற்கடித்தமை

- சோழமன்னர்கள் குலசேகர மன்னனுக்கு குதிரைப்படை உள்ளிட்ட பெரும்படை கொண்ட போர் உதவிகள் கிடைத்தமை. மீண்டும் போர் ஏற்பட்டமை. இது சிங்கள - சோழர் யுத்தம் - வெற்றி பெற்ற சிங்களப்படை சோழநாட்டுக் கிராமங்களுக்கு தீ மூட்டி அழிவு ஏற்படுத்தியமை. குலசேகரன் படையை அழித்தமை. போரின்பின் அரசு வீரபண்டுவிடம் ஒப்படைக்கப்பட்டமை.

- 1ஆம் பராக்கிரமபாகு பாண்டிய வெற்றியின் பின்னர் பண்டுவிஜயகாம என்ற பெயருடைய கிராமம் ஒன்றை தாபித்து பிராமணர்களுக்கு தானமாக வழங்கி விழா கொண்டாடியமை

- இப்போர் பற்றி சோழர் கல்வெட்டில் வேறு விதமாக குறிப்பிடப்படுகிறது.

- 2ஆம் இராஜாதி ராஜனின் 5 ஆவது வருட ஆட்சியில் வெளியிடப்பட்ட ஆர்ப்பாக்கம் கல்வெட்டில் "முதல் சந்தர்ப்பத்தில் குலசேகரனைத் தோற்கடித்து இலங்கை வெற்றி பெற்றது " என்பதாகும்.

- 2 ஆம் இராஜாதி ராஜனின் 8ஆவது ஆட்சியில் வெளியிடப்பட்ட பல்லவராயன் பேட்டை கல்வெட்டு குலசேகர மன்னன் சோழ மன்னனின் உதவி கேட்டதுடன் சோழ மன்னன் உதவி வழங்கி கட்டளையிட்டமை "சிங்களப் படையைக் கொன்று அவர்களை மதுரை வாசலில் ஆணி அடித்து விடும்படியாக இக் கல்வெட்டுக்கமைய சோழத் தளபதி குலசேகர மன்னனனை சிம்மாசனத்தில் ஏற்றிய பின்னர் இலங்கையின் தண்டநாயக்கர் தளபதிகள் தலைகளை மதுரை வாசலில் வைத்து ஆணியறைந்தது சோழ மன்னர் கட்டளையை நிறைவேற்றியமை.

- இராஜாதி ராஜமன்னனின் 12ஆம் வருட ஆட்சியில் வெளியிட்ட திருவாலங்காட்டு கல்வெட்டில் குலசேகர மன்னன் சோழருக்கு எதிராக பராக்கிரமபாகுவுடன் நட்புறவு கொண்டிருந்ததால் சோழர் குலசேகரனை துரத்திவிட்டு வீரபண்டுவை சிம்மாசனம் ஏற்றினர் என்பதாகும்.

- எவ்வாறாயினும் தென்னிந்தியாவின் பாண்டிய நாட்டை ஆக்கிரமிக்கும்போது பெருமளவில் மனித மற்றும் பௌதிக வளங்கள் அழிந்தன.

**(06 புள்ளிகள்)**

**05) ஆறாம் பராக்கிரமபாகுவின் ஆட்சிக்கால அரசியல், கலாசார முக்கியத்துவம் பற்றி விமர்சன ரீதியில் பரிசீலிக்குக.**

**(14 புள்ளிகள்)**

**மூலாதாரங்கள்**

ராஜாவலிய, பெரகும்பாசிரித கல்வெட்டுக்கள் (பெலிகல சன்னஸ வஹரக்கொட பெப்பிலியானே மடவலபர்வத) சந்தேசய காவியம்.

**அரசியல்**

கோட்டையை இராசதானியாகக் கொண்டு ஆட்சி செய்தமை - இலங்கையை இறுதியாக ஒன்றிணைத்த மன்னன்

- இவன் சமகாலத்தில் ஆட்சி அதிகாரத்தை விரிவாக்கிக் கொண்டிருந்த தெடிகம பராக்கிரமபாகு அரச குடும்பத்தில் திருமணத் தொடர்புகளை ஏற்படுத்தியமை தெடிகம உட்பட நான்கு கோறளை, கண்டிப் பிரதேசம், கம்பளை இராசதானி என்பவற்றில் தனது ஆதிக்கத்தைப் பரப்புவதில் வெற்றியடைந்தமை.

- கி. பி. 1412 இல் றைகம அரசனாதல். 1415 இல் ஜயவர்த்தனபுர கோட்டையைத் தலைநகரமாக்குதல்.

- வரண்ட வலயம், உருகுணை பகுதியில் நிலவிய சுயாதீன ஆட்சியாளர்கள் வன்னி அரசில் வாழ்ந்த மகாவன்னியர்மார் அல்லது 18ஆம் வன்னி தலைவர்களை அடிமைப்படுத்தியமை.

- சப்புமல் குமார தலைமையில் படை அனுப்பி யாழ்ப்பாண அரசன் ஆரிய சக்கரவர்த்தியைத் தோற்கடித்து இப்பிரதேசத்தைக் கைப்பற்றியமை.

- ஜோதிய இளவரசன் ஏற்படுத்திய கலகத்தை அம்புலுகல இளவரசனை அனுப்பி அடக்கியமை. நான்கு கோறளை மற்றும் கண்டிப்பிரதேசங்களில் அதிகத்தைப் பரப்புதல்.

- கண்டி மன்னனான விக்கிரமபாகுவை அடிமைப்படுத்தியமை.

- தென்னிந்தியாவில் துறைமுகமான அதிவீரராம பட்டினத்தைத் தாக்கி வெற்றி பெற்றமை. (கிரா சந்தேசயவில் குறிப்பிடப்பட்டுள்ளது)

- விஜயநகர் பேரரசின் ஆக்கிரமிப்பை முறியடித்தமை.

- சீனாவுடன் தொடர்புகளைப் பேணியமை

**கலாசாரம்**

- இம் மன்னன் காலத்தில் நிலவிய அரசியல் பொருளாதார அபிவிருத்தி கலாசார அபிவிருத்திக்கும் காரணமாகியது. அரச ஆதரவு கல்வி விருத்திக்கும் உதவியது.

- பெப்பிலியான சுனேத்திராதேவி பிரிவேன தனது தாயாரின் நினைவாகக் கட்டியமை

- வீதாகம ஸ்ரீகணாந்த, தொட்டகமுவே விஜயபா தெவுந்தர இருகல்குலதிலக காரகலபத்மாவதி பெப்பிலியான சுனேத்திராதேவி எருபத்கொட தர்மராஜ ஆகிய பிரிவேனாக்கள் பிரசித்தி பெற்ற கல்வி நிறுவகங்கள்.

- இங்கு சிங்களம், பாளி, சமஸ்கிருதம், பிராகிருதம் தமிழ் ஆகிய மொழிகளும் காவியங்கள், நாடகங்கள் சோதிட விஞ்ஞானம் கணிதம் சதுர்வேதம், மருத்துவம் ஆகிய பாடங்களும் கற்பிக்கப்பட்டமை.

- இல்லறத்தார் துறவி, அறிஞர் ஆகியோர் பல்வேறு துறைகளுக்குரிய நூல்களை எழுதியமை (மகா காவிய, புதகுண காவிய, சந்தேச காவிய, உபதேச நூல்கள் புகழ் மாலைகள் ஆகியவை)

- இக்கல்வி நிறுவனங்கள் சர்வதேசப் புகழ் பெற்றிருந்தமையால் வெளிநாட்டுத் துறவிகள், இல்லறத்தார் மாணவர்களும் வருகை தந்தனர். (ஸ்ரீ ராமச்சந்திர கவிபாரதி பண்டிதர் தொட்டகமுவ விஜயபா பிரிவேனாவுக்கு ஸ்ரீ ராகுல தேரரின் சீடராக வருகை தந்தார்)

- காட்டில் வாழ்ந்த பிக்குமாரும் கிராமத்தில் வாழ்த பிக்குமாரும் போட்டியிட்டு நூல்கள் எழுதியமை. இது காரணமாக இலக்கிய மறுமலர்ச்சி ஏற்பட்டது. காட்டுவாசி பாரம்பரியம் காரகல பத்மாவதி தொட்ட கமுவ விஜயபா பிரிவேனாவையும் பிரதிநிதித்துவப்படுத்தினார்.

**இலக்கியம்**

- இல்லறத்தார் துறவிகள் கல்வி முன்னேற்றத்ததால் இலக்கியம் முன்னேற்றம் அடைந்தது.

- இக் காலத்தில் வாழ்ந்த இல்லறத்தார் துறவிகள் இலக்கிய முன்னேற்றத்திற்கு விசேட பங்களிப்பு கிட்டியது.

- இந்த அறிஞர்கள் சிங்களம், பாளி, சமஸகிருதம் ஆகிய மொழிகளில் பல்வேறு துறைகளில் உரைநடை மற்றும் செய்யுள் நூல்களை எழுதினார்.

- வீதாகம மைத்ரிய தேரர் – புதுகுணலங்காரய , லோவட சங்கராவ , ஹங்ச சந்தேசய

- தொட்டகமுவ ஶ்ரீ ராகுல தேரர் – காவிய சேகர, பஞ்சிகா பிரதீபய, செலலிகினி சந்தேசய, பரவி சந்தேசய

- வன்தாவே தேரர் – குத்தில காவியம்

- ஶ்ரீ ராமச்சந்திர பாரதி – பக்தி சதகய, விருத்தரத்னாகார பக்ஞகா

**இலக்கியங்கள்**

- இருகல் குலதிலக தேரர் – கோகில சந்தேசய

- தம்மதின்னாசார்ய விமல கீர்த்தி தேரர் – சத்தர்ம ரத்னாகரய

- நன்னுர்ந்துனெய்யார் – ருவன்மலபத்யட நகீமநாமாவலிய

- சரசோதிமாலை, தமிழ் மொழியிலான செய்யுள் நூலில் பரகும்பா சிரித

**புத்த சமயத்துக்கும் ஏனைய சமயங்களுக்கும் ஆதரவு வழங்கியமை**

- மூன்றுமாடி தலதா மாளிகை கட்டுவித்தல்

- இரத்தினபுரி மகாசமன் தேவாலயம் புனருத்தாரணம் செய்வித்தல் (மஹாசமன் தேவாலய சன்னஸ)

- இந்து சமய வழிபாட்டிடமான முன்னேஸ்வரம் ஆலயத்தை புனருத்தாரணம் செய்தமை.

- பிராமணர்களுக்கு ஆதரவு வழங்கியமை (ஓறுவெலதம்ப சன்னஸ, நாயிமன தமிழ் சுவர் எழுத்துக்கள், கிராசந்தேசய

- கோட்டை பத்தினி தேவாலயம் கட்டுவித்தல்

- இக்காலத்தில் அரசியல், பொருளாதாரம், சமயம், கலாசாரம் எனப் பல்வேறு துறைகளிலும் மறுமலர்ச்சி ஏற்பட்டமை.

**(14 புள்ளிகள்)**

**06) இலங்கையின் கரையோரப் பிரதேசங்களில் போர்த்துக்கேயரும் ஒல்லாந்தரும் பின்பற்றிய பொருளாதாரக் கொள்கைகளை ஒப்பிட்டுப் பரிசீலிக்குக.**

**(14 புள்ளிகள்)**

**நோக்கம்**

போர்த்துக்கேயர் கீழைத்தேசங்களுக்கு வருகை தந்ததன் நோக்கங்கள் இரண்டு ( வாஸ்கொட காமாவின் கூற்று – நாங்கள் இங்கு வாசனைத் திரவியந்களையும் கிறிஸ்தவர்களையும் தேடி வந்தோம்.)

**வர்த்தகம்**

வர்த்தகப் பொருட்கள் (சிறப்பாக வாசனைத் திரவியங்கள்) ஐரோப்பாவுக்கு கொண்டு சென்று விற்று இலாபம் பெறுதல்.

**சமயம்**

- கத்தோலிக்க சமயத்தைப் பரப்புதல்
- ஒல்லாந்தரும் வர்த்தகப் பொருட்களைப் பெறுவதற்கும் தமது சமயமான புரட்டஸ்தாந்து சமயத்தை (கல்வின் சமயம்) பரப்புவதற்குமே வருகை தந்தனர். இருப்பினும் ஒல்லாந்தரின் பொருளாதார நோக்கம் போர்த்துக்கேயருடன் ஒப்பிடும்போது மிகவும் சக்திமிக்கது எனக்கூறலாம்

**பொருளாதாரக் கொள்கை**

- போர்த்துக்கேயர் – அரசியல் அதிகாரிகளின் மூலம் இக் கொள்கையை நடைமுறைப்படுத்தினார்.
- ஒல்லாந்தர் – வர்தகக் கம்பனி மூலம் பொருளாதாரக் கொள்கையை நடைமுறைப்படுத்தினர்
- இருதரப்பினரும் – இந் நாட்டில் நடைமுறைப்படுத்திய பொருளாதாரக் கொள்கையின் முக்கிய நோக்கம் இரண்டாகும்.
- ஐரோப்பாவில் அக்காலப்பகுதியில் வரத்தகப் பெறுமதி கொண்ட பொருள்களை இந்நாட்டில் பெற்றுக் கொள்வது. (கறுவா, மிளகு உள்ளிட்ட வேறு வாசனைத் திரவியங்கள்)
- இலங்கைத் துறைமுகங்களை அண்மித்து இதுவரையும் வர்த்தக நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்த ஆசிய வர்த்தகர்களின் ( சீன, அராபிய, மலபார்) வர்த்தக ஏகாதிபத்தியத்தைக் தமது கைகளுக்குள் அகப்படுத்துவது.
- போர்த்துக்கேயர் அடிப்படையில் தமது சொந்த பொருளாதார நடவடிக்கைகளுக்காக சுதேச பொருளா-தார நிர்வாக முறையை அதே முறைப்படி செயற்படுத்தினார். (இராஜகாரிய முறை, நிலவுரிமை முறை, வரி குத்தகை ஒழுங்கமைப்பு)
- ஒல்லாந்தரும் இதனை யொத்த விதத்திலேயே செயற்பட்டனர்.

- சுதேச நிலவுரிமை முறையைப் பயன்படுத்திக் கொள்ளுதல்.
- சாதி (குல) முறைமை கட்டாயசேவையான இராஜகாரிய முறை பயன்படுத்துதல்.
- இருந்தபோதும் ஒல்லாந்தர் தமக்கே உரித்தான பண்புகள் கொண்ட கொள்கையையும் செயற்படுத்தினர்.
- இலங்கையில் காணிகள் பற்றிய தகவல்கள் அடங்கிய தோம்பு தயாரித்ததின் மூலம் ஒல்லாந்தர் பொருளாதார பெறுமதி உடைய காணி பற்றிய விளக்கத்தைப் பெற்றமை.
- பிரதான வர்த்தகப் பொருளாக கறுவா கருதப்பட்டது. எனினும் ஒல்லாந்தர் தமது வரவு செலவுதிட்ட குறைகளை நிறைவு செய்வதற்கு பாக்கு வர்த்தகம் மூலம் பெற்ற வருமானத்தைப் பயன்படுத்தினார்.
- கறுவா, கோப்பி பயிரிட்டமை
- ஆசிய வர்த்தக வலையமைப்புடன் இணைந்து கொண்டவை
- கால்வாய் வழிப்பாதைகள் அமைத்தல் (போக்குவரத்து)
- சில நீர்ப்பாசனங்களை புனருத்தாரணம் செய்தல், அரசின் செலவினைக் குறைப்பதற்காக நெல் உற்பத்தியில் ஈடுபடுதல். கிரம, ஊரு, பொக்க ஆகிய பிரதேசங்களில் குளங்களைப் புனருத்தாரணம் செய்ய நடவடிக்கை எடுத்தல். முத்துராஜ வெல்லவில் பயிர் செய்தல்.
- பருத்திப் பயிர்ச் செய்கை துணிக்குச் சாயமூட்டப் பயன்படுத்தப்படும் இன்டிகோ பயிர்ச் செய்கை.
- சில இடங்களில் கறுவா பயிரிட நடவடிக்கை எடுத்தல். உதாரணம் : கதிரான அவரிவத்த குருந்து வத்த
- கண்டி இராசதானியுடன் உள்நாட்டு வர்த்தகம் நடத்தியதுடன் உள்நாட்டு வர்த்தகத்தில் ஏகபோக உரிமை உருவாக்கியமை. உப்பு கருவாடு என்பவற்றை மலைநாட்டுக்கும் அப்பிரதேசங்களிலிருந்து மிளகு, வெற்றிலை, கராம்பு, ஏலக்காய், தேன், மெழுகு உள்ளிட்ட பொருட்களை கரையோரப் பிரதேசங்களுக்கும் தவளம் முறை மூலம் எடுத்துச் செல்லுதல்.

**(14 புள்ளிகள்)**

07) "1818 பிரித்தானியருக்கு எதிரான சுதந்திரப் போராட்டம் இலங்கை வரலாற்றில் தீர்மானமிக்க சம்பவமாக விளங்குகின்றது"

(i) பிரித்தானிய எதிர்ப்புக் கிளர்ச்சி ஆரம்பமான பிரதேசத்தின் பெயர் யாது? (01 புள்ளி)

(ii) பிரித்தானிய எதிர்ப்புக் கிளர்ச்சியின் தலைவர்கள் இருவரின் பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) பிரித்தானிய எதிர்ப்புப் போராட்டம் ஆரம்பமான விதத்தினைச் சுருக்கமாகத் தருக. (03 புள்ளிகள்)

(iv) 1818 இல் பிரித்தானிய எதிர்ப்புப் போராட்டத்தின் விளைவுகள் இலங்கை வரலாற்றில் தீர்மானமிக்க முக்கியமான கட்டத்தின் குறியிடாக அமைந்த முறையினைப் பரிசிலிக்குக. (08 புள்ளிகள்)

(i) **பிரித்தானிய எதிர்ப்புக் கிளர்ச்சி ஆரம்பமான பிரதேசத்தின் பெயர் யாது?**

ஊவா வெல்லச பிரதேசம்

(01 புள்ளி)

(ii) **பிரித்தானிய எதிர்ப்புக் கிளர்ச்சியின் தலைவர்கள் இருவரின் பெயர்களைக் குறிப்பிடுக.**

கெப்பிட்டிபொல அதிகாரம், மடுகல்லே, கிவுலேகெதர, மொகொட்டால, கனிஷ்ட பிலிமத்தலாவ புட்டாவேரட்டராவ, கொஹுகும்பரே ரட்டராவ, வில்பாவே தொரசாமி, இஹகம தேரர், கொடேகெதரமெஹொட்டால தம்பவின்ன திசானவ.

(02 புள்ளிகள்)

(iii) **பிரித்தானிய எதிர்ப்புப் போராட்டம் ஆரம்பமான விதத்தினைச் சுருக்கமாகத் தருக.**

- 1, 2, 3 உறுப்புரைகளின்படி எடுக்கப்பட்ட நடவடிக்கை - கண்டி மன்னனைச் சிம்மாசனத்திலிருந்து நீக்குதல் இலங்கையின் இறைமையையும் மன்னராட்சி முறையையும் நீக்குதல். இங்கிலாந்தின் மன்னன் அப்பிரதேசத்தின் மன்னனாகப் பிரகடனப்படுத்துதல், கண்டி பிரதேசத்தின் நிர்வாக நடவடிக்கைகளுக்கு ஆளுநரின் பிரிதிநிதியாக ரெசிடன்ட் என்பவர் நியமிக்கப்படுதல். (ஜோன்டொயிலி)

- 4வது உறுப்புரிமை மீறப்படுதல் - ரதன பிரதானிமாரின் அதிகாரம் சலுகைகள் என்பவற்றைப் பாதுகாப்பதாக ஒப்புக்கொண்ட போதும் அவை மீறப்பட்டமை (முடிகே காரியதரிசி பதவிக்கு முஸ்லிம் ஒருவரான ஹஜ்ஜி மரைக்கார் நியமிக்கப்பட்டல் ) பிக்குமாருக்கும் ரதளமாருக்கும் உரிய மரியாதை காட்டப்படாமை

- 5ஆம் உறுப்புரிமை மீறப்படுதல் - பிரித்தானிய ஆட்சியாளர் பிக்குமாருக்கு மரியாதையும் ஒத்துழைப்பும் வழங்குவதாகவும் விகாரைகள் தேவாலயங்களைப் பாதுகாப்பதாகவும் ஒப்புக்கொண்டபோதும் ஆங்கிலேயர் அதனைமீறியதால் பௌத்த பிக்குகளிடமும் பொதுமக்களிடமும் அவர்கள்பற்றிய அதிருப்தி அதிகரித்தமை.

(03 புள்ளிகள்)

(iv) **1818 இல் பிரித்தானிய எதிர்ப்புப் போராட்டத்தின் விளைவுகள் இலங்கை வரலாற்றில் தீர்மானமிக்க முக்கியமான கட்டத்தின் குறியிடாக அமைந்த முறையினைப் பரிசிலிக்குக.**

- இந்தக்கலகம் ஆங்கிலேயரால் கடுமையாக அடக்கப்பட்டது ( இராணுவ சட்டம் விதிக்கப்படுதல், நிலங்களைப் பாழாக்கும் கொள்கை) அந்த எதிர்ப்பைக் காரணமாகக் கொண்டு ஆங்கிலேயர் தாம் விரும்பிய விதத்தில் கண்டியின் ஆட்சிக் கட்டமைப்பில் மாற்றம் ஏற்படுத்தல். (1818 நவம்பர் 21 கண்டிப் பிரகடனம்)
- இதன்மூலம் ஆங்கிலேயர் கண்டியில் தமது சொந்த அதிகாரத்தை உறுதிப்படுத்தியமை
- கண்டிப் பிரதேசத்தை தொடர்ந்தும் பிறிதொரு ஆட்சி அலகாக நடத்தியமை
- கண்டி ரதள பிரதானிமாரின் ஆட்சி அதிகாரத்தைக் குறைத்தலும் அதன்மூலம் அவர்களின் சமூக பொருளாதார சலுகைகளை வரையறுத்தலும். இதன் காரணமாக கண்டியின் பாரம்பரிய தலைமைத்துவம் நலிவடைதல்.
- நீதியை நிலைநாட்டுதல் தண்டனை விதித்தல்முறை மாற்றப்படுதல்.

இக் குறிப்புகளைக் கவனத்தில் கொண்டு மேற்படி கூற்றை பகுப்பாய்வு செய்தல் வேண்டும்.

**(08 புள்ளிகள்)**

**08) 1972 ஆம் ஆண்டு அரசியல் அமைப்பின் முக்கிய அம்சங்களைப் பரிசீலிக்குக.**

**(14 புள்ளிகள்)**

- 1972 குடியரசு அரசியல் யாப்பு தெரிவு செய்யப்பட்ட பாராளுமன்ற உறுப்பினர் குழு யாப்புத்திட்ட சபையாகச் செயற்பட்டு உருவாக்கப்பட்டமை. இதனால் அது தேசிய ஆக்கமாகும்.
- இந்த யாப்பு 1972 இலிருந்து 1978 வரை நடைமுறைப்படுத்தப்பட்டது.
- இந்த யாப்பு அமுலுக்கு வந்ததும் இதுவரை நிலவிய சோல்பரி யாப்பு செயலிழந்தது.
- இது குடியரசு யாப்பு ஆகும்.
- இதுவரை காலமும் பிரித்தானிய முடியுடன் நிலவிய தொடர்புகள் முடிவடைந்தன.
- பிரித்தானிய இராணி இந்நாட்டின் தலைவி அல்ல இதனால் ஆளுநர் நாயகம் பதவி நீக்கப்பட்டது.
  - பிரிவு கவுன்சிலுக்கு மேன்முறையீடு செய்யும் உரிமை நீக்கப்பட்டது.

- இலங்கை ஒற்றையாட்சி சுதந்திரக் குடியரசானது.
- நாட்டின் பெயர் ஸ்ரீலங்கா என மாற்றப்பட்டது.

- நிர்வாகம் தொடர்பான அரசியலமைப்பு அதிகாரம், மக்கள் வாக்கெடுப்பினால் தெரிவு செய்யப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட தேசிய அரசுப் பேரவைக்கு வழங்கப்பட்டது.

- ஒற்றைச்சபை அரசியலமைப்பானதால் அதுவரை நிலவிய செனெற்சபை நீக்கப்பட்டது மக்களின் இறைமையும் தன்னாதிக்கமும் கொண்டது.

- தேசிய அரசுப்பேரவைக்குக் கட்டுப்பாடின்றி சட்டங்களை இயற்றும் அதிகாரம் வழங்கப்பட்டது. சோல்பரி ஆட்சி முறையில் நிலவிய கட்டுப்பாடு (29(2)) நீக்கப்பட்டது. இதுவரை நிலவிய அரச சேவை ஆணைக்குழு, நீதிமன்ற சேவை ஆணைக்குழு என்பன நீக்கப்பட்டன.

- நிர்வாக நடவடிக்கைகள் முன்னெடுக்கப்படவது பிரதம மந்திரி தலைமையிலான அமைச்சரவையினாலாகும். இரத்துச் செய்யப்பட்ட ஆணைக்குழுவிற்கான அதிகாரம் நிறைவேற்றுத் துறையினருக்கு உரியதாகும்.

- ஜனாதிபதி பதவி பெயரளவிலான நிறைவேற்று அதிகாரமுடையவர்.

- அடிப்படை உரிமைகள் பற்றி அரசியலமைப்பில் உள்ளடக்கப்பட்டுள்ளது. தேசியமொழி, தேசிய சமயம்,தேசிய கீதம், தேசிய கொடி அரசியலமைப்பில் உள்ளடக்கப்பட்டுள்ளது. பௌத்த சமயத்தைப் பாதுகாத்தலும் வளப்படுத்தலும் பற்றிய உறுப்புரைகளும் உள்ளன.

- இந்த அரசியலமைப்பின் கீழ் நடத்தப்பட்ட ஒரேயொரு தேர்தல் 1978 இல் இடம்பெற்றது 168 உறுப்பினர் தெரிவு செய்யப்பட்டனர்.

**(14 புள்ளிகள்)**

**09) பின்வரும் தலைப்புகளில் எவையேனும் இரண்டினது வரலாற்று முக்கியத்துவம் பற்றிச் சிறுகுறிப்பு எழுதுக.**

(i) **இராசரட்டையில் சோழர்களின் ஆதிக்கம்.**

(ii) **இரண்டாம் பராக்கிரமபாகு மன்னன்.**

(iii) **கம்பளைக் காலத்தில் யாழ்ப்பாண இராச்சியத்தின் விரிவாக்கம்**

(iv) **19ஆம் நூற்றாண்டின் இறுதி அரைப் பகுதியில் ஏற்பட்ட பௌத்த மறுமலர்ச்சி**

(v) **பொன்னம்பலம் இராமநாதன்**

(vi) **1956 பொதுத்தேர்தல்**

**( ஒவ்வொன்றுக்கும் 7 புள்ளிகள் வீதம் )**

(i) **இராசரட்டையில் சோழரின் ஆதிக்கம்**

- கி. பி 10 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட தென்னிந்திய சோழ ஆக்கிரமிப்பின் காரணமாக அனுராதபுர இராசதானி வீழ்சியடைந்தது

- வட இலங்கையில் சோழராட்சியை விரிவுபடுத்திய முக்கிய சோழ ஆட்சியாளர்கள் இருவர் முதலாம் இராஜராஜன் முதலாம் இராஜேந்திரன் ஆகியோர் ஆவார் சோழராட்சி நிலவியபோது இருந்த வேறு ஆட்சியாளர்கள் முதலாம் இராஜாதிராஜன் இரண்டாம் இராஜேந்திரன் வீர இராஜேந்திரன் அதிஇராஜேந்திரன் முதலாம் குலோத்துங்கன்

- பலவீனமான ஆட்சியாளனான 5 ஆம் மிகுந்து மன்னன் காலத்தில் இராஜரானின் சோழர்படை இலங்கைக்குவந்து அனுராதபுரத்தைச் சூறையாடி அழித்தமை. 5ஆம் மிகுந்து உருகுணுக்கு தப்பியோடியமை

- பின்னர் இருபது வருடங்களுக்கு மேலாக இராசரட்டையின் ஆட்சியை இராஜராஜன் நடத்தினான் என்ற கருத்து உள்ளது.

- சோழப் பேரரசன் இராஜேந்திரன் கி. பி 1017 இல் 5 ஆம் மிகுந்துவை சிறைக்கைதியாக சோழநாட்டுக்குக் கொண்டு சென்ற பின்னர் இராசரட்டை சோழப் பேரரசின் பகுதியாக விளங்கியது. சோழர் அதனை மும்முடிச் சோழமண்டலம் எனப் பெயரிட்டனர். பொலன்னறுவையை நிர்வாக மையமாக்கி ஜனநாதமங்கலம் என அழைத்தனர்.

- மும்முடிச் சோழமண்டலம் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருந்தது - இராஜராஜ வளநாடு, விக்கிரம சோழ வளநாடு.

- முதலாம் இராஜராஜன் முதலாம் இராஜேந்திரன் ஆகிய அரசர்களின் கல்வெட்டுக்கள் இலங்கையில் கிடைத்துள்ளமை. 1 ஆம் இராஜேந்திரனின் திருமண்ணி வலர கல்வெட்டு பொலன்னறுவை, கொழும்பு அருங்காட்சியகங்களில் வைக்கப்பட்டுள்ள சாசனங்கள்.

- இந்நாட்டின் சோழ பிரதேச ஆட்சியாளர் பற்றிய தகவல்களை பெறமுடியாதுள்ளதுடன் சோழரால் இலங்கை ஆட்சிசெய்த முறை பற்றிய சில அனுமானங்கள் மட்டுமே உள்ளன. (போர்ப்படைகளின் உயர்பதவி, ஆட்சி நிர்வாக உயர்பதவி என்பன தென்னிந்தியர்களிடம் இருந்தன.) பிரதேச ஆட்சியில் கிராமங்கள் முக்கியம் பெற்றன. வரிவசூலிக்கப்பட்டது. தஞ்சாவூரில் உள்ள கல்வெட்டில் இலங்கையிலுள்ள 5 கிராமங்களிலிருந்து பெறப்பட்டவரி தஞ்சாவூர் கோவிலுக்கு வழங்கப்பட்டமை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த வரிப்பணம் நெல், பால் என்பவற்றால் செலுத்தப்பட்டிருந்தன. வருடாந்தம் கப்பமும் (திறை) செலுத்தப்பட்டது.

- அவர்களின் ஆட்சிக்காலத்தில் பௌத்த சமயக் கட்டிடங்கள் அழிக்கப்பட்டன சில சந்தர்ப்பங்களில் காணிக்கையும் வழங்கப்பட்டிருந்தமை (வெல்கம் விகாரைக்கு – ராஜராஜனின் பெரும்பள்ளி)

- இந்துகோவில்கள் பல கட்டப்பட்டமை (வானவன் மாதேவி ஈஸ்வரம்) செம்பு வெண்கலம் என்பவற்றால் செய்யப்பட்ட இந்து தெய்வச்சிலைகள் பல கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. (சிவன், விஷ்ணு, பார்வதி நடராஜர்) சோழப் பேரரசின் பிரதேச அதிகாரி ஒருவர் மன்னாரில் கட்டிய கோவில் பேரரசின் பெயரைக் கொண்டு 'இராஜேஸ்வரம்' எனப்பட்டது. இக்காலத்தில் பதவியாவிலும் இந்துக் கோவில் கட்டப்பட்டது.

- சோழர் ஆட்சிப் பிரதேசம் முழுவதும் தென்னிந்திய வர்த்தகக் குழுக்கள் பரவியிருந்தன.

- 1070 இல் 1 ஆம் விஜயபாகு சோழராட்சியிலிருந்து இராசரட்டையை மீட்டெடுத்தான்.

**(07 புள்ளிகள்)**

(ii) **இரண்டாம் பராக்கிரமபாகு**

- இரண்டாம் பராக்கிரமபாகு (1236-1270) தம்பதெனியாவை இராசதானியாக்கிய முதலாவது ஆட்சியாளனான 3ஆம் விஜயபாகுவின் மகன் ஆவான்.

- அவனாட்சிக் காலம் அரசியல் பொருளாதாரம் சமயம் என்பன சிறப்பிடம் பெற்ற காலமாகும்.

**அரசியல்**

- உள்நாட்டு வெளிநாட்டு ஆக்கிரமிப்புக்களை முறியடித்த அரசியல் உறுதித் தன்மையை ஏற்படுத்தியமை

- வன்னி ஆட்சியாளர்களை அடிமைப்படுத்தியமை

- கலிங்கமாகனை துரத்தியமை

- சந்திரபானுவின் ஆக்கிரமிப்பை தோல்வியுறச் செய்தமை

- பாண்டியர் படையெடுப்பை அடக்குதல் (இது பற்றிய மூலாதாரத் தகவல்கள் தெளிவாக இல்லை)

**பொருளாதாரம்**

- வெளிநாட்டு வர்த்தகம் (தெவுந்தர தூண் கல்வெட்டு)

- தென்னை, பலா, பருத்தி பயிர்ச் செய்கை இடம்பெறுதல்

**சமயமும் கலாசாரமும்**

- தம்பதெனிய தலதாமாளிகை கட்டுவித்தல்

- தந்ததாதுவை பெலிகலவிலிருந்து தம்பதெனியாவுக்கு கொண்டு வருதலும் தலதா பூசைகளை நிகழ்த்துதலும்.

- உபசம்பதா முறைக்கு ஆதரவு வழங்குதலும் தின பூஜையை நடத்துதலும்

- சாசன சீர்திருத்தமும் தம்பதெனிய ஒழுக்கக் கோவையை (கதிகாவத்) வெளியிடுதலும்

- அனுராதபுரம் பொலன்னறுவை நகரங்களைப் புனருத்தாரணம் செய்தமை

- நாட்டின் பல பாகங்களிலும் தாதுகோபங்கள் விகாரைகளைப் புபுனருத்தாரணம் செய்தல்

- பிக்குமார் கல்விக்கு ஆதரவு வழங்கியமை

- பிரிவேனாக்களை கட்டுவித்தல் (நந்தன பிரிவேளா, பலாகத்கல பெலிகல, புவனேகபாகு பிரிவேனா)

- தேவிநுவர உபுல்வத் தேவாலயத்தைப் புனருத்தாரணம் செய்தல், வருடாந்த எசல பெரஹரவை நடத்த கட்டளையிடுதல்

- சிவனொளிபாத மலைக்குச் செல்லும் பாதையைச் சீரமைத்தல்

- நன்கு கற்ற அறிஞனாக விளங்கியமை நூல்களை இயற்றுதல் (கவிசிலுமின விசுத்திமக்கசன்னய வனவினிசன்னய)

- மன்னன் 'கலிகால சாகித்திய சர்வக்ஞபண்டிதன்' என்ற சிறப்புப் பெயரால் குறிப்பிடப்பட்டமை

- நூலாக்கத்திற்கு ஆதரவு வழங்கியமை. இக்காலத்தில் சிங்களம், பாளி, சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் பல்வேறு துறைகளில் உரைநடை செய்யுள் நூல்கள் எழுதப்பட்டன. (பூஜாவலிய, தைவக்ஞாக்காமதேனு, சத்தர்மரத்னாவலிய, கத்தவனகல்லவிகார வம்சம், யோகாரணவய சமந்த குட்டவண்ணா, பெஸஜ்ஜமக்ஜுஸா.

**(07 புள்ளிகள்)**

(iii) **கம்பளைக் காலத்தில் யாழ்ப்பாண இராச்சியத்தின் விரிவாக்கம்**

- இது பற்றிய தகவல்களைப் பெறுவதற்கான மூலாதாரங்கள் கொடகம தமிழ் கல்வெட்டு, மெதவல விகார கல்வெட்டு நிகாய சங்கிரகம் ராஜாவலிய அழகேஸ்வர யுத்தம் எனக் குறிப்பிடலாம்.

- இலங்கை வரலாற்றில் கம்பளை இராசதானிக்காலம் ஏறக்குறைய கி.பி 1341 – 1410 வரையிலானது.

- யாழ்ப்பாணத்தை மையமாகக் கொண்டு வடக்கில் ஒரு இராச்சியம் ஆரம்பமானது கி.பி. 1310 - 1311 வரையிலான காலப்பகுதியிலாகும்.

- யாழ்ப்பாண இராச்சியத்தின் ஆட்சியாளன் ஆரியச்சக்கரவர்த்தி என்ற பொதுப் பெயரால் குறிப்பிடப்பட்டான்.

- கம்பளை காலத்தில் ஆரியச்சக்கரவர்த்திகளின் வலிமை விருத்தியடைந்தமை.

- கி. பி 1344 இல் இங்கு வந்த இபின்பட்டூடா ஆரிய சக்கரவர்த்தி ‘இலங்கையின் சுல்தான்’ எனக் குறிப்பிடப்பட்டிருந்தார். அக்காலத்தில் முத்து வர்த்தகம் ஆரிய சக்கரவர்த்திகளின் கைகளில் இருந்தது.

- கம்பளையின் மூன்றாவது ஆட்சியாளனான 3ஆம் விக்கிரமபாகு காலத்தில் (கி. பி 1356 / 1357-1371 / 1372) ஆரிய சக்கரவர்த்திகளின் போர்ப்படை சிங்கள இராசதானிக்குள் புகுந்ததாக கொடகம தமிழ் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

- தெவலவிகார கல்வெட்டின்படி வேறொரு சந்தர்ப்பத்தில் ஆரியச்சக்கரவர்த்தி நாட்டினுள்ளேயும் அதிகாரம் பெற்றிருந்தான் என்பது தெளிவாகிறது. அவ்வாறே நாட்டின் உட்பகுதிகளான சிதுறுவான, பலவிட்ட மாத்தளை தும்பறைச் கமதுன்றட்ட பகுதிகளில் வரிகள் அறவிடல் அந்தணர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

- ஆரிய சக்கரவர்த்தி கொழும்பு, வத்தளை, புத்தளம், நீர்கொழும்பு ஆகிய கரையோர நிலையங்களிலும் ஆட்சியைக் கைப்பற்றியிருந்தான். இந்து சமுத்திரத்தின் வர்த்தகம் அவன் கைகளில் இருந்தது.

- ஆரிய சக்கரவர்த்தியைத் துரத்துவதற்காக அக்காலத்தில் முதன் மந்திரியாக இருந்த அழகக்கோனோரை (அழகேஸ்வரர்) கோட்டை பாதுகாப்பு அரணைக் கட்டியமை உள்ளிட்ட பல்வேறு நடவடிக்கைகளையும் மேற்கொண்டான். அழகக்கோனோர் போர் ஒழுங்கமைப்பையும் சக்திமிக்கதாக்கி பின்னர் ஆரியசக்கரவர்த்தியின் வரிசேகரிப்போர்மீது தாக்குதல் நடாத்தி துரத்தினான்.

- இதனைக் கேள்வியுற்ற ஆரியச்சக்கரவர்த்தி கோபமடைந்து தரை, கடல் இரண்டினாலும் ஒரே தடவையில் தாக்குதல் நடத்த இரண்டு படைகளை அனுப்பினான். தரைப்பக்கம் வந்த படைகளை மாத்தளை முகாமில் சிறைப்பிடித்து கடல்வழி வந்த படையினரை தெமட்டகொட, கொறகான முகாம்களில் சிறைப்பிடித்தான்.

- இந்நிலைமை காரணமாக கம்பளை ஆட்சியாளனான 5ஆம் புவனேகபாகு றைகமவுக்குத் தப்பியோடினான்.

- மலைநாட்டுப் படைகளினால் மாத்தளை முகாமில் சிறைபிடிக்கப்பட்டிருந்த படைதோல்வியடைந்து அழகக்கோனர் தெமட்டகொட, றோகன முகாம்களிலிருந்த படைகள் அழிக்கப்பட்டது.

- இவ்வாறு யாழ்ப்பாண இராச்சியத்தின் ஆட்சி விரிவாக்கம் கட்டுப்படுத்தப்பட்டது.

**(07 புள்ளிகள்)**

(iv) **19 ஆம் நூற்றாண்டின் இறுதி அரைப் பகுதியில் ஏற்பட்ட பௌத்த மறுமலர்ச்சி**

**ஆரம்பம்**

- கிறிஸ்தவ மிவுனிமாரின் சமயப்பிரசார நடவடிக்கைகள், பிரித்தானிய ஆட்சியின் கொள்கைகளின்படி பௌத்த சமயத்துக்கு ஏற்படுத்தப்பட்ட சவால்கள் என்பற்றைக் காரணமாகக் கொண்டு அதற்கு எதிரான செயற்பாடாக ஆரம்பமானது.

- கொகர்லி போன்ற குருமார் பௌத்த சமயத்தை விமர்சனம் செய்தமையும் பௌத்த தலைவர்கள் அதற்கு பதிலளிக்க முன்வந்தமையும்.

- இதற்குப் சூழ்சிக்குப் பதிலளிக்கும் முறையிலான செயற்பாடுகளில் மீதொட்டவத்தே குணானந்ததேரர் பங்குபற்றிய பாணந்துறை விவாதம் ஒன்றாகும்.

- இவ்விவாதம் அமெரிக்காவில் பிரசித்தி பெற்றதால் பரம விஞ்ஞானார்த்தவாதிகளின் கவனம் இலங்கையின் பக்கம் திரும்பியது.

- ஒல்கொட் பிலவத்ஸ்கி ஆகியோர் இந்நாட்டுக்கு வந்தனர். இந்நாட்டில் பௌத்த பிரம்மஞான சங்கம் தாபிக்கப்பட்டது. பௌத்த கல்வி அபிவிருத்திக்காக இந்த சங்கம் முன்வந்தது. (ஆனந்தா, மியூசியஸ் பௌத்த பாடசாலைகள் தாபிக்கப்பட்டன.)

- பிரிவேன கல்வி புத்துயிர் பெற்றது.
  1873 இல் மாளிகாகந்த வித்தியோதய பிரிவேனா, 1875 இல் பேலியகொடை வித்தியாலங்கார பிரிவேனா தாபிக்கப்படல். இவை கீழைத்தேய மொழிகளின் கல்வியில் கற்றறிந்தோரை உருவாக்கும் நிலையங்களாயின.

- பௌத்தர்களுக்கான உரிமைகளை வென்றெடுத்தல், பௌத்த கொடி, வெசாக் விடுமுறை தினம்.

- பௌத்த ஆவணங்கள் நூல்கள் வெளியிடும் அச்சங்கள் ஆரம்பமாதல். இதன்மூலம் பௌத்த சமயப் பிரசாரம் செய்தல், பிரித்தானிய ஆட்சியின் சில கொள்கைகளை விமர்சித்தல்.

- புதிய தாதுகோபங்கள், விகாரைகள் கட்டப்படுதல் தூபராமய ரூவான் வெலிசாய போன்ற வரலாற்று பௌத்த இடங்கள் புணருத்தாரம் செய்யப்பட்டமை.

**(07 புள்ளிகள்)**

(v) **பொன்னம்பலம் இராமநாதன்**

- 1851 இல் யாழ்ப்பாணம் மானிப்பாயில் பிறந்தார்.
  ( தகப்பன் வாசலமுதலி அருணாசலம் பொன்னம்பலம்)

- இந்து சமய மறுமலர்ச்சி இயக்கத்திற்கு பங்களிப்பு செய்தார். (பாடசாலைகளை தாபித்தல், மருதனார் மடம் மகளிர் கல்லூரி, யாழ்ப்பாணம் பரமேஸ்வரக் கல்லூரி, தற்போது யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்)

- 1873 - 86 சட்டத்தரணியாக செயற்பட்டமை.

- 1879 - 92 சட்டவாக்க கழகத்தில் உத்தியோகப் பற்றறற்ற தமிழ் உறுப்பினராகுதல்.

- 1892 - 1906 முதலாவது இலங்கை சொலிசிற்றர் ஜெனரரலாகக் கடமையாற்றியமை.

- 1911 - 21 சட்டவாக்க கழகத்தில் படித்த இலங்கையர் பிரதிநிதியாக செயற்பட்டார். அட்டோர்ணா ஜெனரலாகவும் கடமையாற்றினார்.

- 1821 - 24 சட்டவாக்க கழகத்தில் நியமன உறுப்பினராக நியமிக்கப்படல்

- 1924 - 30 அரசியலமைப்பு சபையில் வட மாகாணத்தின் உத்தியோகப் பற்றற்ற உறுப்பினராதல்.

- தேசிய மறுமலர்ச்சி இயக்கத்தில் சிறப்பிடம் பெற்ற தலைவராவார். 1912 மது வரிக்கு எதிராக குரலெழுப்பியவர். 1815 சிங்கள முஸ்லிம் கலவர வேளையில் பிரித்தானிய அரசாங்கம் சிங்களவர் தொடர்பாக நடந்து கொண்ட முறையைக் கடுமையாக விமர்சனம் செய்தமை.

- தேசிய இயக்கத்தின் முக்கிய தலைவராக இருந்த போதும் சர்வசன வாக்குரிமை வழங்குவதை எதிர்த்தமை.

**(07 புள்ளிகள்)**

(vi) **1956 பொதுத் தேர்தல்**

- 1956 ஏப்ரல் 5, 7, 10 ஆம் திகதிகளில் பொதுத் தேர்தல் நடைபெற்றமை.

- இத்தேர்தலின் முக்கிய நிகழ்வுகள்
  - சிங்கள மொழியை மட்டும் அரசகரும மொழியாக ஏற்றுக் கொள்ளல்.
  - 1947 இலிருந்து தொடர்ச்சியாக ஆட்சியிலிருந்த ஐக்கிய தேசியக் கட்சியின் கொள்கைகளை விமர்சித்தலும் மாற்றம் தேவையென்பதில் கவனம் செலுத்துதலும்.
  - பௌத்த சாசன ஆணைக்குழுவினால் பௌத்த மதம் சம்பந்தமாக அரசினால் நிறைவேற்றப்பட வேண்டிய பொறுப்புக்களில் கவனம் செலுத்தப்படல்.

- சமூகத்தில் பல்வேறு பிரிவினரும் எதிர்நோக்கிய பிரச்சினைகள், பௌத்த மதகுருமார், சுதேச வைத்தியர், ஆசிரியர், விவசாயிகள், தொழிலாளர் ஆகிய பிரிவினர் பிரதிநிதித்துவப்படுத்திய பஞ்சமகாபலவேகய அமைக்கப்பட்டமை.

- இந்த இயக்கம் அப்போதிருந்த குடியேற்ற நாட்டு அரசியலமைப்புக்குப் பதிலாக தேசியத்தை மதிக்கும் புதிய அரசியலமைப்பைப் பெறுவதை நோக்காக செயற்பட்டமை.

- இவ்வியக்கம் S. W. R. D. பண்டாரநாயக்க தலைமையிலான ஸ்ரீ லங்கா சுதந்திரக் கட்சியில் ஒன்று சேர்ந்தமை.

- இடது சாரிக் கட்சிகளின் பல்வேறு குழுக்களும் இக்கட்சியுடன் தொடர்பு கொண்டு மக்கள் ஐக்கிய முன்னணி எனும் பெயரில் கூட்டமைப்பை ஏற்படுத்தி தேர்தலுக்கு முகம் கொடுத்தமை.

  - கூட்டங்கள், வீட்டுக்கு வீடு செல்லுதல் முறையில் தேர்தல் பிரசாரம் இடம் பெறல்.

  - மக்கள் ஐக்கிய முன்னணி பெருமளவு வெற்றி பெற்றமை.

  - ஐ.க்கிய தேசியக் கட்சி 8 ஆசனங்கள் மட்டுமே பெற்றமை.

  - இத்தேர்தலும் மக்கள் ஐக்கிய முன்னணியின் வெற்றியும் இந்நாட்டின் அரசியல் வரலாற்றில் மறக்க முடியாத திருப்பு முனையாக அமைந்தது.

- அரசியல் ஆதிக்கம் ஒரு கட்சியிலிருந்து இன்னொரு கட்சிக்கு மாற்றப்படுதல்.

- தெரிவு செய்யப்பட்ட பாராளுமன்ற உறுப்பினர் குழு பிரிவுகள் அதன் செயற்பாடுகள் மாறுபட்டமை.

- சிங்கள தேசியவாதிகள், பௌத்தர்கள், மாக்ஸிய வாதிகள் என வேறுபட்டிருந்த குழுக்கள் ஒரு ஐக்கிய முன்னணியானமை.

- தேசிய உடை, சிங்கள மொழியில் சபை நடவடிக்கை

- புதிய அரசாங்கமும் மந்திரி சபையும் வேறுபடுதல்.

- தேர்தல் காலத்தில் அரசுக்கு எதிராக முன்வைக்கப்பட்ட விடயங்கள் மற்றும் எதிர்கட்சியினர் கொண்டு வந்த ஆலோசனைகளில் வெற்றி காணுதல் மூலம் இந் நாட்டின் அரசியலில் தீர்மானமிக்க மாறுதல் ஏற்பட்ட முடிந்தமை.

  - ஆட்சி மாற்றம் அவசியமம் என்பது பொருத்தமற்ற முறையில் அதிகாரத்தைப் பயன்படுத்துதல், செல்வந்தர்களுக்கு சார்பான கொள்கைகளை விமர்சித்தல்.

- சிங்களம் மட்டும் அரசகரும மொழியாக்கப்படுதல் - ஆங்கில மொழிப் பாடசாலைகளுக்கும் அக்கல்விக்கும் அதிக இடம் வழங்கப்படுவதாக குற்றம் சுமத்தப்பட்டதுடன் ஆங்கிலம் கற்றவர்களுக்கு அரச உத்தியோகங்கள் ஏகபோகமாக்கப்பட்டதாகக் குற்றம் சுமத்தப்படுதல்.

- பௌத்த சமய முன்னேற்றத்துக்கு நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல். பௌத்த ஆணைக்குழு, ஐக்கிய பௌத்த முன்னணி சேர் ஜோனின் பௌத்த விரோத அறிக்கைகளுக்கு எதிராக விமர்சித்தல்.

- பொருளாதாரப் பிரச்சினைகளில் கவனம் செலுத்துதல் - நெல்விலை, பாடசாலை மாணவருக்கு மதிய உணவு வழங்குதல் நிறுத்தப்பட்டமை, உத்தரவாத விலை முறையை உரிய விதத்தில் நடைமுறைப்படுத்தாமை செல்வந்த பொருளாதாரக் கோலம் என்பன பற்றி விமர்சித்தல்.

- பிரித்தானிய முடியுடன் நிலவிய ஆட்சிமுறை ஒப்பந்த அடிப்படையிலான பிணைப்பு நீக்கப்பட வேண்டுமென்பது - இராணுவ முகாம்.

**(07 புள்ளிகள்)**

❋❋❋❋❋❋❋❋